## உங்கள் கண்மணியின் கனவை
## கனவாகவே இருக்க விடாதீர்கள்

## குழந்தைகள் பரிசு வளரும் நிதி உதவி
## கொண்டு கனவை நனவாக்குங்கள்.



உங்கள் கண்மணிக்கு ஒரு பரிசை அளியுங்கள் அவனுடன் கூடவே வளரும் அப்பரிசு. யூனிட் ட்ரஸ்டின் குழந்தைகள் பரிசு வளரும் நிதியில் முதலீடு செய்யுங்கள். உங்கள் கண்மணி 21 வயதாகும் போது நீங்கள் முதலீடு செய்யும் அப்பணம் அவனுக்கு தேவைக்கேற்ப உதவும்.

ஒரு மொத்த தொகையை ஒரே தடவையாக பரிசளிக்கலாம். அல்லது சிறு சிறு தொகையாக வருடா வருடம் செலுத்தலாம். எப்படியாயினும் உங்கள் கண்மணி 21 வயதாகும் போது அவன் லட்சாதிபதியாவதை உறுதி செய்யலாம் (அவனுக்கு தேவையானால் 18 வயதாகும் போது பணத்தை எடுக்கும் அனுகூலமும் உண்டு.)

யூனிட் ட்ரஸ்டின் குழந்தைகள் பரிசு வளரும் நிதி. உங்களது சிறிது ஆலோசனை உங்கள் கண்மணியின் சிறந்த எதிர்காலத்தின் உத்தரவாதம்.

விண்ணப்ப பாரங்கள் யூனிட் ட்ரஸ்ட் கிளைகள், எல்லா பாங்குகள் மற்றும் கலெக்ஷன் சென்டர்களில் அங்கீகரிக்கப்படும்.

விண்ணப்ப பாரம் மற்றும் ப்ரோஷருக்கு ஏதேனும் யூனிட் ட்ரஸ்ட் கிளை முக்கிய பிரதிநிதி அல்லது ஏஜெண்டை அணுகவும்.

குழந்தைகள் பரிசு வளரும் நிதி

~~13%~~ **14% டிவிடெண்ட்**

~~5~~ **3 வருடத்திற்கொருமுறை போனஸ்**



**யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா**

22 மில்லியனிலும் அதிகம் யூனிட்தாரர்களின் சேவையில்.

எல்லா செக்யூரிட்டீஸ் இன்வெஸ்ட்மெண்ட்களும் மார்க்கெட் ரிஸ்க் கொண்டவை ஆகும். முதலீடு செய்வதற்கு முன் முதலீட்டு ஆலோசகர் அல்லது முகவரை கலந்தாலோசிக்கவும்.

**Branch Offices:** • Madras Ph: 517101, 517178 • Coimbatore Ph: 210399 • Madurai Ph: 34597 • Trichy Ph: 27774

Sista's UTI 1968 92 TM E

*" Now be a good boy, Floppy*
*And come for your bath".*



Your child and Floppy

You just can't keep them apart.




# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி

## அன்பெனும் மதம்

இந்தியாவிற்கும் இந்தியர்களுக்கும் இந்த 1993-ம் ஆண்டு மகத்தானது. ஏனெனில் இது சுவாமி விவேகானந்தர் நூறு ஆண்டுகளுக்கு முன் அமெரிக்காவிலுள்ள சிகாகோவில் அனைத்துலக மதமாநாட்டில் தம் உரையை ஆற்றி உலகத்த வருக்கு ஹிந்து மத மேன்மையை உணரச் செய்த நினைவு ஆண்டாகும்.

அவர் தம் சொற்பொழிவை ஆற்றுமுன் தலைவர்களை முதலில் வணங்காமல் அவையோருக்கு முதல் வணக்கம் செலுத்தியது எல்லோருடைய பாராட்டுதல்களையும் பெற்றது. மேலும், அவர் தொடக்கத்தில் 'சகோதர, சகோதரிகளே' என ஆரம்பித்தது எல்லோர் மனதையும் நிறைவு செய்தது. அவரது உரை எல்லோர் மனதையும் ஒரு அபூர்வசக்தியால் மாற்றியது.

அவர் மக்களுக்கு அன்பை போதித்து மனிதனுக்கும் மனிதன் வேறுபாட்டைக் காணக்கூடாது என்றும் ஒருவன் எந்த நாட்டையோ, மதத்தையோ சார்ந்தவனாயினும் எல்லோருக்கும் சமமே என்றார். நான்கு பேர் ஒருவரை ஒருவர் அன்புடன் நேசித்தால் அது ஒரு புதிய மதத்தை நிறுவுகிறது என அவர் கூறினார்.

இந்த அன்புவழியைத்தான் காந்திஜீயும் தன் தென்னாப்பிரிக்கப் போராட்டத்தில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்கு எதிராகப் பயன்படுத்தினார். அதே வழியைத் தம் தாய் நாட்டின் விடுதலைக்காக இந்தியாவிலும் கையாண்டார். அவர் இந்தியாவை ஒன்றுபட்டதாயும், இந்தியர்கள் யாவரும் சமம் என்றும் சகோதரர்கள் என்றும் கூறி விடுதலைப் போருக்கு ஒரு புதிய வழியைத் துணிவுடன் காட்டினார்.

இந்தியா விடுதலை அடைந்து நாற்பத்தாறு ஆண்டுகளாகின்றன. காந்திஜீ நம்மிடமிருந்து பிரிந்து சென்றும் அவ்வளவு ஆண்டுகளே ஆகின்றன. இன்றும் நாம் நம்மிடையே ஒற்றுமையைக் காண முயன்றே வருகிறோம்.

மதிமுகம்: 92 ஜனவரி 1993 புன்னகை: 1

தனிப்பிரதி: ரூ. 4-00 வருட சந்தா: ரூ. 48-00

CHITRA

# மங்கை

ஜனவரி 1993

☆ பொங்கல் திருவிழா (சிறப்புக் கட்டுரை)

☆ பொங்கல் எப்படி?

☆ இசை விழா கார்ட்டூன்

☆ வீணை வித்வான் சங்கீத கலாநிதி ஆகிறார்!

☆ நாட்டின் முதல் பெண்மணி

☆ திருமகளே வா! வா!! (கவிதை)



மற்றும் வழக்கமான சிறப்புப் பகுதிகள்

விலை ரூ. 6/-




# அமைதிக்கான நோபல் பரிசு




சென்ற ஆண்டைப்போலவே இந்த ஆண்டிலும் அமைதிக்கான நோபல் பரிசு பெற்றவர் ஒரு பெண்மணியே ஆவார். சென்ற ஆண்டு மியான்மாரை (பர்மா) சார்ந்த திருமதி ஆங்சான் சூகி பெற்றார். இந்த ஆண்டில் செல்லி ஏரி கோபெர்டா மெஞ்சு பெறுகிறார். இவர் தம் நாடான கௌதிமாலாவை விட்டு மெக்சிகோவில் குடியேறியவர்.

இவருக்கு அளிக்கப்பட்ட பாராட்டுப் பத்திரத்தில் "தம் நாட்டிலும், அமெரிக்கா கண்டத்திலும் உலகில் மற்ற இடங்களிலுள்ள பல இனத்தவரிடையேயும் பண்பாட்டுகளிடையேயும் சமூகங்களிடையேயும் இருக்கும் வேறுபாடுகளையும் மோதல்களையும் போக்கி அமைதியையும் நட்பையும் ஏற்படுத்தும் அற்புத சக்தியைக் கொண்டவருக்கு எடுத்துக்காட்டாக இவர் விளங்குகிறார்" என நோபல் பரிசுக் கமிட்டி கூறியுள்ளது.

மெஞ்ச் முப்பத்துமூன்று ஆண்டுகளுக்கு முன் ஒரு ஏழைக் குடும்பத்தில் பிறந்தவர். கௌதிமாலாவில் கடந்த முப்பது ஆண்டுகளாக நடந்து வரும் உள்நாட்டுப் போரில் இவரது குடும்பம் சிதறிப் போயிற்று. பல மத்திய, தென் அமெரிக்க நாடுகளைப் போலவே கௌதிமாலாவிலும் ஐரோப்பாவிலிருந்து வந்து அங்கு குடியேறிய அயல் நாட்டவர்க்கும் ஏற்கனவே அங்கே வசித்து வரும் செவ்விந்தியர்களுக்கும் பல மோதல்கள் ஏற்பட்டுக்கொண்டே இருக்கின்றன. 1970-80ல் அந்நாட்டு மக்கள் பயங்கர அடக்குமுறையை அனுபவித்தார்கள்.

பணக்கார நிலச்சுவான்தாரர்களும், இராணுவத்தினரும் நடத்திய பயங்கரத் தாக்குதல்களில் மெஞ்ச் தன் தாய் தந்தையரையும் ஒரு சகோதரனையும் இழந்தாள். அப்போது அவளுக்கு வயது இருபது. அப்போது

முதல். அவள் மக்களுக்காகப் போராடுவதாகத் தீர்மானித்தாள். கௌதிமாலா இராணுவத்தை எதிர்க்க அவள் கொரில்லாப் போர்முறையைக் கையாள வேண்டியதாயிற்று.

அதுவரை கௌதிமாலா இராணுவம் ஐம்பதாயிரம் செவ்விந்தியர்களைக் கொன்றிருந்தது. முப்பது ஆண்டுகளாக நடந்த உள்நாட்டுப் போர்களில் உயிரிழந்தோர் 1,20,000 மெஞ்சின் அரசியல் முறை வன்முறையற்றது எனக் கூறமுடியாது போனாலும் அவளது கொள்கை அமைதியையும் நட்புறவையும் கூட்டு வாழ்க்கையும் ஏற்பட உதவியது என்பதில் சந்தேகம் இல்லை. அவளது போராட்டம் மனித உரிமையின் பாதுகாப்பிற்கும் முன்னேற்றத்திற்கும் மிகவும் உதவுவதாக உள்ளது.

இதுபற்றி நோபல் பரிசுக் கமிட்டி உறுப்பினர் ஒருவர் இவ்வாறு கூறினார்: அமெரிக்காவிலும் மற்ற நாடுகளிலும் வாழ்ந்துவரும் சுதேசி மக்களின் பிரச்னைகளைத் தீர்ப்பதிலும் காட்டிய நேர் வழிக்காக மெஞ்சுக்கு அளிக்கப்பட்ட இப்பரிசு அவரை மேலும் இப்பணியில் உற்சாகப்படுத்தும்'' எனக் கூறினார்.

கொலம்பஸ் அமெரிக்காவில் அடிஎடுத்து வைத்து 500 ஆண்டுகள் முடிந்த விழாக் கொண்டாடும் இந்த ஆண்டில் மெஞ்சுக்கு நோபல் பரிசு கிட்டியது குறிப்பிடத்தக்கதாகும்.

தனக்கு நோபல் பரிசு அளிக்கப்படுகிற செய்தி கேட்டு மெஞ்ச் இவ்வாறு கூறினார். '' போராட்டங்களில் தம் வாழ்வையும் உயிரையும் அர்ப்பணித்தவர்களின் குரல்கள் இப்போதும் எதிரொலிக்கின்றன. எல்லாமே முடிந்து விட்டது எனச் சோர்ந்து கிடந்த கடந்த கால வாழ்க்கை இனி இல்லை. வரலாற்றில் புதிய அத்தியாயங்களைச் சேர்க்க நம்மிடம் பல பக்கங்கள் உள்ளன'' என்றார் தம் முழு நம்பிக்கையை வெளிப்படுத்தியவாறே.

1992-ல் மற்ற துறைகளில் நோபல் பரிசுகள் பெற்றவர்கள். பிரான்ஸ் நாட்டுப் பேராசிரியர் ஜார்ஜஸ் சார்ஸாக் (பௌதிகம்) அமெரிக்க நாட்டுப் பேராசிரியர் ரொ டால்ப் ஏ. மார்க்கஸ் (ரசாயனம்) அமெரிக்கப் பேராசிரியர் எட்மண்ட் ஷீபர், டாக்டர் எட்வின் க்ரெப்ஸ் (மருத்துவம்) பேராசிரியர் காரி எம். பெக்கர் (பொருளியல்) மேற்கிந்தியத் தீவுகளை சேர்ந்த வால்காட் (இலக்கியம்)



# ராணி பெற்ற பெண்

மணலூர் என்ற கிராமத்தில் மணி கண்டன் என்ற இளைஞன் இருந் தான். அவன் இளம் வயதில் தாயை இழந்தவன். தந்தையோ ஊரில் நிறையக் கடன் வாங்கி அடைக்காமல் இறந்துவிட்டார். அத னால் மணிகண்டன் தன் தந்தை விட்டுப் போன ஒரே வீட்டை விற் றுக் கடனை எல்லாம் அடைத்தான். அதன் பிறகு அவ்வூரில் வாழப் பிடிக்காமல் அவன் அந்த ஊரை விட்டுக் கிளம்பித் தலைநகரை நோக்கிச் சென்றான்.

வழியில் ஒரு காட்டினுள் போக வேண்டியதாயிற்று. அங்கு மந்திரக் காரி மங்கம்மா வாழ்கிறாள் என அவன் கேள்விப்பட்டிருந்தான். ஓரிடத்தில் ஒரு குடிசை இருப்பது கண்டு அது மங்கம்மாவின் குடிசை யாகத்தான் இருக்கும் என அவன் நினைத்தான்.

அக்குடிசை வாசலுக்குப் போய் நின்று "மங்காப்பாட்டீ! குடிக்கக் கொஞ்சம் தண்ணீர் கொடுக்கி றாயா?" என்று கேட்டான். உள்ளே இருந்து "யாரடா அவன் என் பெயரைச் சொல்லிக் கூப் பிடுவது?" என்று கேட்டவாறே கிழவி மங்கம்மா "தண்ணீர்தானா வேண்டும்? ரொம்பக் களைத்துப் போயிருப்பது போலத் தெரி கிறதே. உள்ளே வா. நல்ல சாப் பாடே போடுகிறேன்" என்றாள். மணிகண்டனோ அவளது பயங் கர உருவத்தைப் பார்த்து சற்று பயப்பட்டுத்தான் போனான். ஆனாலும் தைரியத்துடன் உள்ளே சென்றான்.

மங்கம்மா இலைபோட்டு இன்ன முது படைத்தாள். அதை உண்ட மணிகண்டன் "ஆகா என்ன ருசி! பாட்டீ! உன் கை சமையல் அமிர்

—சங்கர சுவாமிநாதன்—



தம் போல உள்ளது'' என புகழ்ந்தான். அதைக் கேட்ட மங்கம்மா ''இன்றிரவும் நீ இங்கேயே தங்கி சாப்பிட்டு விட்டு நாளை நீ உன் வழியே போகலாம்'' என்றாள்.

மணிகண்டனும் சரி எனவே மந்திரக் கிழவியும் ''நீ பார்க்க ராஜகுமாரன்போல இருக்கிறாய். உனக்கு ஒரு ராஜகுமாரியைக் கல்யாணம் செய்து வைக்கிறேனே'' என்றாள் சிரித்தவாறே. மணிகண்டனும் ''பாட்டீ! கேலியா செய்கிறாய்? பணமே இல்லாத என்னை என் அழகுக்காக மட்டும் எந்த ராஜகுமாரி மணந்து கொள்ளச் சம்மதிப்பாள்?'' என்றான்.

அப்போது மந்திரக் கிழவி ''இந்த மங்கம்மாவால் முடியாது என்று எதுவும் கிடையாது'' என்றாள்.

மங்கம்மாவுக்கு அந்நாட்டு அரசகுமாரியிடம் மிகவும் பிரியம் உண்டு. ஏனென்றால் ராணி கர்ப்ப முற்று இருந்தபோது மன்னனுடன் அக்காட்டிற்கு வேட்டையாட வந்தாள். அவர்கள் மாலையான போது மங்கம்மாவின் குடிசை இருக்கும் வழியாகத் தலைநகருக்கு திரும்பிக் கொண்டிருந்தார்கள். அப்போது ஒரு சிறுத்தைப் புலி எங்கிருந்தோ பாய்ந்து வந்தது. மன்னன் அதை எதிர்த்துச் சற்று நேரத்தில் கொன்றும் விட்டான். ஆனால் சிறுத்தையைக் கண்ட ராணியோ பயந்து விட்டாள். அதனால் பிரசவ வலி எடுக்கவே மங்கம்மா ஓடிப்போய் அவளைத் தன் குடிசைக்குள் அழைத்துச் சென்றாள். ராணி அவலட்சணமான ஒரு பெண் குழந்தையைப் பெற்றுவிட்டு இறந்து போனாள்.

மன்னனுக்கு தன் விகாரமான மகளை யாருக்கும் காட்ட இஷ்டம் இல்லை. அதனால் அந்தப்புரத்தில் ஒரு ரகசிய அறையில் அவளை வளர்த்து வந்தான். அந்த அரசகுமாரி வெளியுலக வாசனையே இல்லாமல் வளர்ந்து விவாக வயதை அடைந்துவிட்டாள். மன்னன் அவளுக்கு எப்படித் திரு

மணம் செய்து வைப்பது என்று கவலைப்படலானான். தன் குடிசையில் பிறந்தவளாயிற்றே என்ற காரணத்தால் மங்கம்மா அவ்வப்போது அரண்மனைக்குப்போய் அவளைப் பார்த்து வந்தாள்.

மணிகண்டனைக் குடிசையில் விட்டு விட்டு மறுநாள் காலையில் மங்கம்மா அரசனைக் காண அரண்மனைக்குச் சென்றாள். போகும்போது ஒரு கிளியைப் பிடித்து ஒரு கூண்டில் அடைத்து அதனைத் தன்னோடு அவள் எடுத்துச் சென்றாள். மன்னன் அவளைக் கண்டதும் "என்ன மங்கம்மா! ஏன் கிளியைக் கொண்டு வந்திருக்கிறாய்?" என்று கேட்டான்.

அவளும் "சென்ற முறை நான் வந்தபோது அரசகுமாரி ஒரு கிளியைப் பார்க்க ஆசையாக இருக்கிறது என்றாள். அதனால் எடுத்து வந்தேன்" எனக் கூறி அரசகுமாரியைக் காணச் சென்றாள்.

கிளியைப் பார்த்த அரசகுமாரி "இது எவ்வளவு அழகாக இருக்கிறது. இதற்கு ஒரு தங்கக் கூண்டு செய்யச் சொல்கிறேன்" என்றாள். அப்போது மங்கம்மா "காடுகளிலும் மலைகளிலும் சுதந்திரமாகப் பறந்து திரியும் இதை உன்னைப் போல அடைத்து வைக்க விரும்புகிறாயா?" என்று கேட்டாள்.

அரசகுமாரியும் "காடா!



மலையா! அதெல்லாம் எப்படி இருக்கும்? நான் பார்க்க வேண்டுமே" என்றாள். எனவே மங்கம்மாவும் "என்னோடு வா. அவற்றைக் காட்டுகிறேன்" என்று கூறி அவளை ஒரு கிளியாக மாற்றினாள். கூண்டிலிருந்த கிளியை எடுத்து வெளியே பறக்க விட்டு கிளியாக மாற்றிய அரசகுமாரியைக் கூண்டிற்குள் அடைத்து எடுத்துக்கொண்டு அவள் தன் குடிசைக்குச் சென்றாள்.

அவள் குடிசைக்குள் நுழைந்ததும் மணிகண்டன் "பாட்டீ! திடீரென என்னால் எதையும் பார்க்க முடியவில்லையே. என்ன செய்வேன்?" என்று கதறினான்.




மங்கம்மாவும் "கவலைப்படாதே. வைத்தியத்தில் கைதேர்ந்த என் பேத்தியை அழைத்து வந்திருக்கி றேன். அவள் சிகிச்சை அளித்து விரைவிலேயே உனக்குப் பார்வை வரும்படி செய்வாள்" என்றாள். மங்கம்மா ஏதோ மந்திரம் சொல் லக் கிளியை முன்போல அரச குமாரியாக ஆக்கினாள். அவளி டம் ஒரு கிண்ணியில் ஏதோ சாறைக் கொடுத்து அதை மணி கண்டனின் கண்களில் தடவச் சொன்னாள்.

மணிகண்டனின் அழகைக் கண்டு அரசகுமாரி மலைத்துப் போனாள். அவள் கிழவி கொடுத்த சாறை அவனது கண்களில் தட வினாள். அப்போது மணிகண் டன் அவளிடம் "நீ யாரென்று எனக்குத் தெரியவில்லையே" என்று கேட்கவே அவளும் "அது தான் பாட்டி சொன்னாளே. நான் அவளது பேத்தி. இதைத் தடவும்போது கண்ணில் எரிச்சல் ஏற்படுகிறதா" என்று கேட்டாள். அவனோ "இல்லை. உன் கைபட் டாலே சில்லென்று இருக்கிறது" என்றான்.

கிழவி அரசகுமாரிக்குக் கிளி யாக மாறி மீண்டும் அரசகுமாரி யாக மாற்றுவதற்கான மந்திரங் களைச் சொல்லிக் கொடுத்தாள். அரசகுமாரி மாலையாகும்போது கிளியாக மாறிப் பறந்து அரண் மனைக்குப்போய் தன் அறையில் முன்போல அரச குமாரியாக ஆனாள்.

மறுநாள் மத்தியானம் அரண் மனையிலிருந்து காட்டிற்கு வந் தாள். மணிகண்டனின் கண்களில் பச்சிலைச் சாறைத் தடவினாள். இப்படியே பத்து நாட்கள் நடந் தன. மணிகண்டன் மனதில் இனி மேல் கிழவியின் பேத்தியை விட்டுப் பிரிந்திருக்க முடியாது என்ற எண்ணம் வலுத்துவிட்டது.

ஒருநாளிரவு மணிகண்டன் மங் கம்மாவிடம் "பாட்டீ! எனக்குப் பார்வை கிடைத்துவிட்டால் உன் பேத்தியை மணந்து கொள்ள ஆசைப்படுகிறேன். அவள் என்னை மணக்கச் சம்மதிப்பாளா?" என்று

கேட்டான். மங்கம்மாவோ "என்னடா இது! உனக்கு இந்த நாட்டு அரசகுமாரியை அல்லவா திருமணம் செய்து வைப்பதாகக் கூறினேன். என் பேத்தி என்று சொல்லவில்லையே" என்றாள்.

மணிகண்டனும் "எனக்கு ஒன்றும் அரச குமாரி வேண்டாம். நான் மணம் செய்துகொள்வதானால் உன் பேத்தியைத்தான் மணந்து கொள்வேன்" என்றான். மறுநாள் அரசகுமாரி வந்தபோது மங்கம்மா அவளிடம் மணிகண்டனின் ஆசையைக் கூறவே அரச குமாரியும் "இவ்வளவு அழகானவருக்கு நான் பொறுத்தமானவளா?" என்று கேட்டாள்.




அப்போது மங்கம்மா "இவனுக்குப் பார்வையே திரும்பி வராது என்று தட்டிக்கழிக்கப் பார்க்கிறாயா" என்று கேட்டாள். அதற்கு அரசகுமாரி "அது இல்லை. அவருக்குப் பார்வை இல்லாவிட்டால் என்ன? எனக்கு இருக்கிறதே" என்றாள்.

அதைக்கேட்ட மங்கம்மா "நீங்கள் இருவரும் ஒருவரை ஒருவர் விரும்புகிறீர்கள். உன் தந்தைகூட உன் நாட்டிற்காக ஆசைப்படாமல் உன்னை மட்டும் விரும்புபவனுக்கே உன்னைக் கல்யாணம் செய்து கொடுக்கப்போவதாகவும் என்னிடம் கூறினார். கவலைப் படாதே. இனி மணிகண்டனுக்குப் பார்வை கிட்டி விடும்" என்றாள். அதைக்கேட்டு மகிழ்ந்து அரசகுமாரி தன் அரண்மனைக்குத் திரும்பிச் சென்றாள்.

மறுநாள் மத்தியானம் அரசகுமாரி திரும்பி வந்ததும் மங்கம்மா மணிகண்டனிடம் "இதோ என் பேத்தி வந்திருக்கிறாள். நான் உங்கள் திருமணத்திற்கான முகூர்த்தம் கூடக் குறித்து வைத்து விட்டேன். ஒருமுறை நீ உன்னைக் கல்யாணம் செய்து கொள்ளப்போகும் பெண்ணை நீ பார்த்துக் கொள்" என்று கூறி ஏதோ மந்திரம் சொல்லி அவனுக்குப் பார்வை கிடைக்கச் செய்தாள்.

மணிகண்டன் கண்ணைத் திறந்

ததும் "ஆஹா! எனக்குப் பார்வை கிடைத்துவிட்டது" எனக் கூறி மங்கம்மாவின் பக்கம் நிற்கும் பெண்ணைப் பார்த்துவிட்டு தலையைத் திருப்பிக் கொண்டான்.

அப்போது மங்கம்மா "ஏன்? என் பேத்தியைப் பிடிக்கவில்லையா?" என்று கேட்டாள். மணிகண்டனும் "பிடிக்கிறது. ஆனால்..." என்று இழுத்தான் அப்போது மங்கம்மா ஒரு சிறிய முகம் பார்க்கும் கண்ணாடியை அவனிடம் கொடுத்து "உன் முகத்தைப் பார்" என்றாள்.

மணிகண்டன் அக்கண்ணாடியில் தன் முகத்தைப் பார்த்ததும், ஓவென அலறிவிட்டான். ஏனெனில் அவனது முகம் விகாரமாக மாறி இருந்தது. அப்போது மங்கம்மா "மணிகண்டா! இப்போது சொல். நீ என் பேத்திக்கு ஏற்றவன் தானே" என்று சிரித்தவாறே கேட்டாள்.

அப்போது மணிகண்டன் தலை குனிந்தவாறே "பாட்டீ! என் அறியாமையைப் போக்கிவிட்டாய். நான் இத்திருமணத்திற்கு என் மனப்பூர்வமாகச் சம்மதிக்கிறேன்" என்று கூறினான். உடனே மங்கம்மா ஒரு மலர்மாலையை அவனிடம் கொடுத்து அரசகுமாரியின் கழுத்தில் போடச் சொன்னாள்.

அவ்வளவுதான் மறுவிநாடி விகாரமாக இருந்த அரசகுமாரி அழகிய தங்கப்பதுமைபோல உருப்பெற்று புன்னகை புரிந்தாள். மணிகண்டனும் அழகிய வாலிபனாக மாறிவிட்டான்.

மங்கம்மா எல்லாவற்றையும் விவரமாக மன்னனிடம் கூறினாள். மன்னனும் நாடு கிடைக்கும் என்று ஆசைப்படாமல் விகாரமாக இருந்த தன் மகளை மணக்க முன் வந்த மணிகண்டனைப் பாராட்டினான். சில ஆண்டுகளுக்குப்பிறகு அந்த மன்னன் இறந்துபோகவே மணிகண்டன் அந்த நாட்டின் மன்னனாகி நீண்ட காலம் நல்லாட்சி புரிந்து வந்தான்.






## 9

*[மகேந்திரன் இளவரசி வித்தியாவதியைத் தேடியவாறே ஒரு பெரிய மாளிகையை நடுக்காட்டில் கண்டான். அவன் அதன் காவலாளியின் உதவியால் தங்கி அங்கே காவளாளியாகப் பணிபுரியும் உத்தியோகத்தையும் பெற்றான். அவன் பல அறைகளைச் சுத்தம் செய்பவன் போல அம்மாளிகையைச் சுற்றிப் பார்த்தான். பிறகு—]*

மன்னனும் ராணி வஜ்ஜிரேஸ்வரியும் "இளவரசி காணாமல் போய் ஒரு வாரத்திற்கும் மேலாகி விட்டது. ஆனால் அவளைப் பற்றி எவ்விதத் தகவலும் கிடைக்கவில்லையே" என்று கூறிக் கவலைப்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

வீரசேன மன்னன் ராணியிடம் "நான் வித்தியாவதியைத் தேடிக் கண்டுபிடிக்க நான்கு திசைகளிலும் வீரர்களை அனுப்பியுள்ளேன். அவர்களில் சிலர் இன்னமும் திரும்பி வரவில்லை. நம் நாட்டு மக்களில் சிலரும்கூட அவளைத் தேடிப் போயிருக்கிறார்கள். விரைவிலேயே நற்செய்தி கிடைக்கும். கவலைப்படாதே" என்று சொல்லித் தேற்றினான்.

அப்போது "ராணி ஆமாம். வித்தியாவதியைத் தேடிக் கண்டு



பிடித்து அழைத்து வருவதாக உங்களிடம் ஒரு இளைஞன் கூறி விட்டுச் சென்றதாகச் சொன்னீர்களே. அவனைப் பற்றி ஏதாவது தெரிந்ததா?'' என்று கேட்டாள்.

மன்னனும் ''ஆமாம் அந்த மகேந்திரன் கூட இன்னமும் வரவில்லை. அவன் மனஉறுதிக் கொண்டவன் என்று நன்கு தெரிகிறது. அதனால் கண்டிப்பாக அவன் நல்ல செய்தியை கொண்டு வருவான்'' என்றான்.

ராணியும் ''சோதிடர்கள் என்னவோ அவள் ஜாதகப்படி துஷ்ட கிரகங்கள் நகர்ந்து நல்ல காலம் விரைவில் ஆரம்பமாகப் போகிறது என்றார்களே'' எனவே மன்னனும் ''கவலைப்படாதே. நம் சோதிடர் வாசஸ்பதியாரை அழைத்து கிரக நிலை பற்றித் தெரிந்து கொள்ளலாம்'' என்றான்.

அவன் உடனேயே ஒரு வீரனை அழைத்து அரசாங்க சோதிடரை அழைத்து வரும்படிச் சொல்லி அனுப்பினான். சற்று நேரத்தில் வாசஸ்பதியும் வந்து மன்னனை வணங்கி ''நானே தங்களைக் காணப் புறப்பட்டுக் கொண்டிருந்தேன். அப்போது தாங்கள் அனுப்பிய வீரனும் வந்தான். என்கூட இப்போது வந்திருப்பவன் என் முக்கிய சீடர்களில் ஒருவனான மஞ்சுநாதன். இவன் என்னிடம் கூறிய செய்தியைத் தங்களுக்குத் தெரிவிக்கவே கிளம்பினேன். இவனையும் கூட்டிக்கொண்டு வந்ததும் அக்காரணத்தால்தான்'' என்றான்.

அப்போது ராணி ஆவலுடன் ''வித்தியாவதியைப் பற்றியத்தகவலா?'' என்று கேட்டாள். அப்போது மஞ்சுநாதன் ராணியை வணங்கி ''ஒரு விதத்தில் அது இளவரசியைப் பற்றிய தகவல் என்றும் சொல்லலாம். எனக்கு சோதிட சாஸ்திரத்தில் சில சந்தேகங்கள் ஏற்பட்டன. அவற்றை தீர்த்துக் கொள்ள பல சோதிடர்களைச் சந்திக்கலானேன். அப்போது என் குருவைச் சந்திக்க ஜகன்நாதாசாரியார் வந்திருப்பது தெரிந்தது.

நான் அவரைச் சில தடவைகளில் சந்தித்திருந்தேன். அதுபற்றிக் கூற நான் என் குருவின் இல்லத்தை அடைந்தபோது ஜகன்நாதர் அங்கே இருக்கவில்லை'' என்று கூறினான்.

''நான் அவரைச் சந்தித்தபோது இளவரசியின் ஜாதகத்தைக் காட்டி அதுபற்றி பேசினேன் இளவரசி காணாமல் போன நாளிலிருந்து அவரும் எனக்குத் தென்படவில்லை. ஆனால் அவர் இளவரசியின் ஜாதகம் பற்றி வேறு சோதிடர்களைக் கலந்து பேசினார் என்று தெரிய வந்தது. இது என்ன விபரீதம் என்று நான் கவலைப்பட்டேன்'' என்றார் வாசஸ்பதி.

அது கேட்டு மன்னன் ''ஓ! அப்படியானால் அவரைக் கண் காணிக்க வேண்டும்'' என்றான். வாசஸ்பதியும் ''இதுவரை நான் அவரைப் பார்க்கவில்லை. ஆனால் இளவரசியின் ஜாதகம் பற்றி அவர் பல சோதிடர்களிடம் விவாதித்தார் என்று கேட்டதும் முதல் எனக்கு அவர்மீது சந்தேகம் ஏற்படத் தொடங்கிவிட்டது. அவர் எங்கே போனார் என்றும் தெரியவில்லை'' என்றார்.

மன்னனும் ''அது பற்றி நான் விசாரிக்க ஏற்பாடு செய்கிறேன். அவர் கிடைத்ததும் தங்களுக்குத் தெரியப்படுத்துகிறேன்'' என்றான். வாசஸ்பதியும் ''நானும் அவரைத் தேடிப் பார்க்கிறேன். எனக்கு



அகப்பட்டால் தங்களுக்குத் தெரிவிக்கிறேன்'' எனக்கூறி வணங்கி விடை பெற்றுக்கொண்டு தம் சீடனோடு அங்கிருந்து சென்றார்.

மன்னனும் உக்கிரசேனனை அழைத்து வாசஸ்பதியார் கூறியதைச் சொல்லி ஜகன்நாதரைக் கண்டுபிடிக்கச் சொன்னான். உக்கிரசேனனும் ''இந்த ஜகன்நாதர் நம் சோதிடருடன் சேர்ந்து வந்து இளவரசியின் ஜாதகம் பற்றிப் பேசியபோதே எனக்கு அவர்மீது சந்தேகம் ஏற்பட்டது இளவரசி காணாமல் போன நாளிலிருந்து அவரும் காணப்படவில்லை என்று கேட்டதும் என் சந்தேகம் உறுதியாயிற்று. அதனால்



இரவு முழுவதும் கண் விழித்துக் கொண்டிருந்தது மகேந்திரனுக்குக் கஷ்டமாகத் தோன்றவில்லை. வாசல் கதவருகே சற்று நேரம் உட்கார்ந்திருந்தான். பிறகு எழுந்து அங்கும் இங்குமாக உலவினான். சுற்றிலும் பார்த்தான் மாளிகையின் கீழ்ப் பகுதியிலுள்ள அறைகளிலிருந்து வெளிச்சம் வருவதைக் கண்டான். சற்று நேரத்திற்குப் பின் அந்த வெளிச்சமும் மறைந்தது. பிறகு மாளிகையின் மேற்பகுதியிலுள்ள இரு அறைகளிலிருந்து வெளிச்சம் வந்தது. சற்று நேரத்திற்குப் பின் அந்த வெளிச்சமும் இல்லாது போயிற்று. எங்கும் ஒரே இருட்டாக இருந்தது.

நாம் சற்று எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும்'' என்றான்.

மன்னனும் "சரி, மகேந்திரனைப் பற்றி ஏதாவது தெரிந்ததா? அவனது தாயார் எப்படி இருக்கிறாள்?'' என்று கேட்டான். உக்கிரசேனனும் "அவளுக்கு ஒரு குறையும் இல்லாது கவனித்துக் கொள்கிறார்கள். மகேந்திரன் இன்னமும் திரும்பி வரவில்லை. அவனிடமிருந்தும் எவ்விதத் தகவலும் இல்லை'' என்றான். மன்னனும் "எனக்கு என்னவோ அந்த மகேந்திரன்தான் நம் வித்தியாவதியைப் பற்றிய நற்செய்தி கூறுவான் என்ற நம்பிக்கை ஏற்பட்டுள்ளது'' என்றான்.

காலையானதும் காவலாளி வந்து மகேந்திரனை அழைத்துக் கொண்டு தென்புறமாகச் சென்றான். அவர்கள் ஒரு பெரிய சாப்பாட்டுக் கூடத்தில் நுழைந்தார்கள். அவர்கள் சாப்பிட உட்கார்ந்தபோது சமையலறையிலிருந்து வெள்ளைத் திரைச்சீலையால் முகத்தை மறைத்துக் கொண்டு ஒரு கிழவி வருவதை மகேந்திரன் கண்டான். அவள் பின்னால் இரு பணிப் பெண்கள் இரண்டு தட்டுகளில் உண்ண பலகாரங்களையும் அருந்தப் பானங்களையும் எடுத்துக் கொண்டு செல்வதை அவன் கவனித்தான்.

அந்த இருபணிப் பெண்களும்

பார்க்க ஒரே மாதிரி இருந்தார்கள். அவர்கள் அணிந்திருந்த ஆடைகளும் ஒன்றுபோல இருந்தன. அணிந்திருந்த நகைகளும் அப்படியேதான். இதென்ன அதிசயம் என நினைத்தவாறே மகேந்திரன் ஒருவாறாகச் சாப்பிட்டு எழுந்தான். அதன்பிறகு இளைப்பாற அவன் காவலாளியின் அறைக்குச் சென்றான்.

மாலையானதும் அவன் எழுந்து தான் காவல்புரிய வேண்டிய இடத்திற்குச் சென்றான். அவன் தான் உட்காரும் கல்லின்மீது நின்று சுற்றிலும் பார்த்தான். சற்று தூரத்தில் அம்மாளிகையின் படிக்கட்டுகளைத் தவிர வேறு எதுவும் தெரியவில்லை. ஏதோ சலசலப்பு ஏற்படுவதை அவன் கேட்டான். அவன் அந்த இடத்திற்குச் சென்றான். அங்கு அவன் காலையில் சாப்பாட்டுக் கூடத்தில் கண்ட கிழவியைப் பார்த்தான். அவளுக்குப் பின்னால் அழகிய பெண் ஒருத்தி அந்தத் தோட்டத்து மலர்களைத் தொட்டுப் பார்த்துக் கொண்டே வந்து கொண்டிருந்தாள். காலையில் பார்த்த இரு பெண்களைவிட அவள் அழகாக இருந்தாள்.

மகேந்திரன் ஏதோ வேலை செய்பவன் போல அங்கும் இங்கும் போய் வந்தான். ஆனால் அவனது கவனம் முழுவதும் அவர்கள் இருவர் மீதே இருந்தது. அவர்கள் இருவரும் தமக்குள் பேசிக்கொள்ள





வில்லை. கிழவி ஓரிடத்தில் உட்கார, அந்த பெண் மட்டும் அங்கும் இங்கும் போய் வந்து கொண்டிருந்தாள். சற்று நேரமானதும் வேறொரு பெண் வந்து அக்கிழவியிடம் ஏதோ கூறினாள். உடனே கிழவி எழுந்து மாளிகைக்குள் சென்றாள்.

வந்த பெண் தோட்டத்தில் உலாவிக் கொண்டிருந்த இளம் பெண்ணை அணுகினாள். அவர்கள் சற்று நேரம் அங்கே இருந்து விட்டு மாளிகைக்குள் சென்றனர். அவர்கள் சென்ற சற்று நேரத்தில் மாளிகையின் மேற்பகுதியிலுள்ள ஒரு அறையில் விளக்கு வெளிச்சம் தெரிந்தது. ஆனால் அந்த அறை தான் முன்தினம் கண்ட அறை அல்ல என அவன் தெரிந்து கொண்டான்.

முதலில்தான் கண்ட பெண் யாராக இருக்கும் என எண்ணிக் கொண்டே மகேந்திரன் தன் இடத்திற்குப் போய் அமர்ந்தான். அந்த இரு பெண்களும் ஒரே மாதிரியான உடைகளை அணிந்திருந்தது ஏன் என்று அவன் யோசிக்கலானான்.

வெகு நேரமான பிறகு காவலாளி மகேந்திரனுக்கு உணவு கொண்டு வந்தான். அப்போது மகேந்திரன் அவனிடம் "எஜமானர் போய்விட்டாரா? எங்கும் ஒரே அமைதி நிலவுகிறதே! என்று கேட்டான். காவலாளியும் "இல்லை. இல்லை அவர் இங்குதான் இருக்கிறார். அவர் இரவும் பகலும் சோதிடர்களிடம் ஏதோ விவாதித்துக் கொண்டிருக்கிறார். அதனால் அவர் இந்தப் பக்கம் வரமாட்டார். ஆனாலும் நீ எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும்" என்று கூறினான்.

அப்போது மகேந்திரன் "நான் இங்கே காவலாக இருப்பது எஜமானருக்குத் தெரியுமா?" என்று கேட்டான். காவலாளியும் "தெரியும். நேற்று நான் சொல்லி விட்டேன். சரி. உட்கார். சாப்பிடு" என்று கூறி அவனை உட்கார வைத்தான். பிறகு அவன் "ஒரு முக்கியமான விஷயம் தெரியுமா? இந்த மாளிகை

யில் ஒரு பெண் இருக்கிறாள். அவள் ஏதோ ஒரு நாட்டின் இளவரசியாம். அவள் இங்கே சிறிது காலத்திற்கு இருப்பாளாம். அதனால் நீ காவலில் கண்ணும் கருத்துமாக இருக்க வேண்டும். தெரிந்ததா?'' என்று கூறினான்.

மகேந்திரனும் சாப்பிட்டு முடித்து விட்டு ''ஒரு வேளை எஜமானர் இந்தப் பக்கமாக வந்தாலும் வரலாம். அதனால் இமை கொட்டாமல் காவல் காப்பேன்'' என்றான்.

காவலாளி அங்கிருந்து போனதும் மகேந்திரன் அங்கிருந்து சென்று தோட்டத்தினுள் நுழைந்தான். அங்கே ஓரிடத்தில் நின்று அவன் மாளிகையைப் பார்த்தபோது அது முழுவதுமாகத் தெரிந்தது. மாளிகையின் எல்லாக் கதவுகளும் மூடப்பட்டே இருந்தன. மாளிகையில் கீழ்ப்பகுதியிலுள்ள அறைகளின் சன்னல் கதவுகள் எல்லாம் மூடப்பட்டிருந்தன.

மாளிகையின் மேல் பாகத்திலுள்ள அறைகளில் சிலவற்றின் சன்னல் கதவுகள் திறந்திருந்தன. எங்கும் நிசப்தமாக இருந்தது. ஆள் நடமாட்டமே இருக்கவில்லை. மகேந்திரன் சுற்றிலும் பார்த்தான். அவனுக்குத் தான் தேடிவந்த இளவரசியாகத்தான் அந்த இளம் பெண் இருக்க வேண்டும் என்ற உறுதியான நம்பிக்கை ஏற்பட்டு விட்டது.

அவன் அங்கிருந்து தான் உட்காரும் இடத்திற்குப் போய்ச் சேர்ந்தான். அவன் மனம் எப்படி இளவரசியைக் காண்பது என்பது பற்றி நினைக்கலாயிற்று. அதற்கு என்ன வழி என்று யோசித்துக் கொண்டே இருந்தான். அப்போதைக்கு உடனே எதுவும் அவனுக்குத் தோன்றவில்லை. எனவே அவன் ஆழ்ந்து யோசிக்கலானான்.

(தொடரும்)






# வாக்கு தவறினாள்!

**த**ன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! இந்த பயங்கர இரவிலும் நீ விடா முயற்சியுடன் ஒரு வேலையைச் செய்து முடிப்பது என்று கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறாய். ஒரு சிலர் தான் என்ற கர்வம் கொண்டு தான் சொன்ன சொல்லைக் காப்பாற்றாமல் போவதும் உண்டு. இதனை விளக்க ஒரு அரசகுமாரியின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்" என்று கூறிக் கதையைச் சொல்ல ஆரம்பித்தது.

ஜயபுரத்து மன்னன் ஜயசிம்மன் பராக்கிரமசாலி. நியாயம் தவறா

## வேதாளம் சொல்லும் கதை




தவன். அவன் மனைவி சந்திரா வதி. அவர்களுக்குப் பிறந்தது ஒரே பெண் குழந்தை. அதற்கு இந்து மதி என்று பெயரிட்டு செல்லமா யும் ஆண்பிள்ளையைப் போல வும் வளர்த்து வந்தார்கள்.

இந்துமதி சாதாரணப் படிப் போடு அரசகுமாரர்களுக்கான வில், வாட் போர் ஆகியவற்றில் நல்ல தேர்ச்சி பெற்றாள். அவள் வளர்ந்து திருமண வயதை அடைந்த போது அவளது பெற்றோர் அவ ளுக்கு விவாகம் செய்து வைக்க நினைத்தார்கள்.

அவர்கள் அதுபற்றி இந்துமதி யிடம் கூறவே அவளோ "நான் விவாகம் செய்து கொள்வதா னால் என்னை எந்த அரசகுமாரன் வாட்போரில் தோற்கடிக்கிறானோ அவனைத்தான். இதனை அறி வித்து விடுங்கள்" என்றாள்.

அந்த அறிவிப்பைக் கேட்டதும் பல அரசகுமாரர்கள் அவளை மணக்க வந்தார்கள். அவள் அந் நாட்டு மன்னனின் ஒரே மகளாத லால் அவளை மணந்து கொண் டால் அந்த நாட்டிற்கும் தாம் அர சராகி விடலாமே என்ற ஆசை யில்தான் வந்தார்கள். மேலும் அவள் பெண்தானே மிக எளிதில் வாட்போரில் அவளைத் தோற்க டித்து விடலாம் எனவும் நினைத்து விட்டார்கள்.

வாட்போர் புரிய அவர்கள் களத்தில் இறங்கியபோதுதான் இந்துமதியை வெல்வது எளிதல்ல என்பது அவர்களுக்குத் தெரியவந் தது. தினமும் ஒரு அரசகுமாரனு டன் வாட்போர் என அவள் ஏற் பாடு செய்திருந்தாள். அவளுடன் வாட்போர் புரிந்த அரச குமாரர் கள் எல்லோருமே தோற்றுப் போனார்கள்.

இந்தப் போட்டிகள் நடந்து கொண்டிருந்த போது மரகதபுரி இளவரசன் மதனசேனன் மாறு வேடம் பூண்டு வேடிக்கை பார்க் கும் மக்களோடு சேர்ந்து இந்துமதி வாள் சுற்றும் முறைகளையும் தாக் குதல்களுக்குக் கையாளும் வழி முறைகளையும் கூர்ந்து கவனிக்க

லானான்.

சில சமயங்களில் இந்துமதி யின் அபார வாள்வீச்சைக் கண்டு சபாஷ் என்று கத்தினான். அப்போ தெல்லாம் இந்துமதி திரும்பிப் பார்த்து அப்படிக் கத்திய ரசிகன் யார் எனவும் பார்த்தாள்.

மதனசேனன் இந்துமதியின் வாட்போர் முறைகளை எல்லாம் நன்கு பார்த்த பிறகு அரசகுமார னாக அவளுடன் போட்டியிட வந்தான். இருவருக்கும் வாட்போர் நடக்க நாளும் குறிப்பிடப்பட் டது. போட்டி மிகவும் கடுமையா கவே இருந்தது. அப்போது இந்து மதி தன்னை எதிர்ப்பவன் மிகவும் திறமை மிக்கவன் எனத் தெரிந்து கொண்டாள்.

அவனைத் தோற்கடிக்கத் தான் அதுவரை பயன்படுத்தாத ஒரு முறையை அவள் கையாள நினைத்த போது மதனசேனன் வேறொரு முறையைக் கையாண்டு அவளது வாளைத் தட்டிவிட்டான். அது அவளது பிடியிலிருந்து நழுவி சற்று துரத்தில் போய் விழுந்தது. இந்துமதி தோற்றுப் போனாள்.

அப்போது அவள் மதனசேன னைக் கூர்ந்து கவனித்து ''நீ இதற்கு முன் நான் மற்ற அரசகுமா ரர்களோடு வாட்போர் புரிந்த போது மக்களிடையே மாறு வேடத்தில் பார்வையாளனாக அமர்ந்து வேடிக்கை பார்த்தவன்



தானே. அப்போது சில சமயங் கள் சபாஷ் என்று கத்தி எனக்குப் பாராட்டுதல்களைத் தெரிவித்தவ னும் நீதானே'' என்று கேட்டாள்.

மதனசேனனும் ''ஆமாம். நீ மற்ற அரசகுமாரர்களோடு வாட் போர் புரிந்தபோது பார்வையா ளனாகத்தான் மக்களோடு சேர்ந்து ரசித்தேன்'' என்றான். அதைக் கேட்டதும் இந்துமதிக்கு அவன் வெற்றி பெற்றதற்கு என்ன கார ணம் என்று தெரிந்து விட்டது.

அவள் மதனசேனனைப் பார்த்து ''நான் உன்னை மணப்பது முறை யல்ல. அதற்குக் காரணம் என்ன என்று நீயே யூகித்துக் கொள்'' என் றாள். மதனசேனனும் ''நீ கூறு




வது சரியே. நான் உன்னை மணப்பதும் முறையல்லதான்'' என்று கூறி அவளை அவன் வணங்கி விட்டுத் தன் நாட்டிற்குப் திரும்பிச் சென்று விட்டான்.

ஜயபுரத்து மன்னனும் ராணியும் தம் மகள் கூறியதைக் கேட்டுத் திகைத்துப் போனார்கள். அவர்கள் ''இந்துமதிதானே தன்னை வாட்போரில் வென்ற அரசகுமாரனை மணப்பதாக கூறினாள். அதன்படி ஏற்பாடு செய்த போட்டியில் அரசகுமாரனான மதனசேனன் அவளைத் தோற்கடித்தானே. அப்படி இருந்தும் அவனை மணப்பது முறையல்ல என அவள் சொல்வதே சரி என்று கூறி அவளை மரியாதையுடன் வணங்கி விட்டுச் சென்று விட்டானே. இது என்ன திடீர்த் திருப்பம்? நமக்கு ஒன்றுமே புரியவில்லையே'' எனக் குழம்பித் தவித்தார்கள்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே! எனக்கு ஒரு சந்தேகம். இந்துமதி வாட்போரில் தனக்கு நிகர் யாரும் இல்லை என்று நினைத்துத்தானே தன்னை வாட்போரில் வெல்லும் அரசகுமாரனை மணப்பதாக அறிவித்தாள். அவள் அரசகுமாரர்களை ஒருவர் பின் ஒருவராக தோற்கடித்ததால் அவளது கர்வம் அதிகரித்தே இருக்க வேண்டும். அப்பப்பட்ட நிலையில் மதனசேனன் அவளை எதிர்த்து வாட்போர் புரிந்து அவளைத் தோற்கடித்தாள். அப்படி இருந்தும் அவள் கர்வமேலீட்டால் தானே தான் அவனை மணப்பது முறையல்ல என்று அவனை நிராகரித்தாள்? மதனசேனனும் அவள் மிக்க கர்வம் பிடித்தவள் என எண்ணி அவளுக்கு பயந்து அவள் கூறுவதே சரி என்று சொல்லி அவளை வணங்கிவிட்டுச் சென்றான்? இதற்குக் காரணம் இந்துமதியின் கர்வம்தானே? இது தான் என் கேள்வி. இதற்குத் தக்க விடை தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''இந்துமதி கர்

வம் பிடித்தவள் அல்ல. அவள் வாட்போரில் தன்னை வெல்லும் அரசகுமாரனை மணப்பதாக அறிவித்தாள். ஆனால் அரசகுமாரன் மதனசேனன் அவளை வாட்போரில் தோற்கடித்தும் அவனை மணப்பது முறையல்ல எனக்கூறி மறுத்து விட்டாள். இது அவள் தான் கூறிய வாக்கைக் காப்பாற்றவில்லை என்று ஆகிவிடாது. நன்கு யோசித்துப் பார்த்தால் உண்மைக் காரணம் தெரியவரும். மதனசேனன் மற்ற அரசகுமாரர்களைப் போல நேராகப் போட்டியில் கலந்து கொள்ளவில்லை. முதலில் அவன் மாறுவேடத்தில் பார்வையாளனாக மக்களோடு சேர்ந்து இருந்து இந்துமதி கையாளும் முறைகளை எல்லாம் கவனித்து அவற்றைக் கற்றுக் கொண்டான். எனவே மறைவாக அவன் ஒரு குருவிடம் கற்றதுபோல இது ஆகிறது. குரு சீடனை மணப்பது முறையல்ல. மறைந்திருந்து தன் முறைகளைக் கற்ற மதனசேனன் தன் சீடன் என்றும் தான் அவனது குரு என்றும் இந்துமதி நினைத்தே தான் அவனை மணப்பது முறையல்ல என்று கூறினாள். மதனசேனனும் அவளது எண்ணத்தைப் புரிந்து கொண்டு அவளைத் தன் குருவாகக் கருதி அவளை மரியாதையுடன் வணங்கிவிட்டுச் சென்றான். இது அவளிடம் கொண்ட பயத்தால் அல்ல. குரு பக்தியால் தான். இந்துமதியும் கர்வம் கொண்டு அவனை மணக்க மறுக்கவில்லை. ஒரு குரு சீடனை மணப்பது முறையல்ல என நினைத்தே தன் வாக்கையும் மீறத் துணிந்தாள். இதுதான் உண்மையான காரணம்'' என்று கூறினான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு உயரக் கிளம்பி மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.





# அவன் திருவுள்ளம்

ஒருநாள் பாலூர் மணியகாரரர் பாலுசாமி தன் வேலையாள் முனியனுடன் தன் நிலங்களைச் சுற்றிப் பார்த்து விட்டு ஊர் திரும்பி வந்து கொண்டிருந்தார். அவர்கள் பெருமாள் கோவில் பக்கம் வந்த போது ஒரு பிராம்மணன் வந்து "ஐயா மணியகாரரே! நான் அயலூரான். என் பெண்ணிற்கு ஏற்ற வரனைத் தேடி கிளம்பினேன். எனக்கு இந்த ஊரில் யாரையும் தெரியாது. இன்றிரவு தங்கள் வீட்டில் போஜனமும் தங்க இடமும் அளிக்க வேண்டுகிறேன்" என்றான்.

பாலுசாமியும் "ஆகா! பகவான் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வேளைக்கும் இன்ன இடத்தில் இன்ன சாப்பாடு என்று வகுத்து வைத்திருக்கிறார். இன்று உங்களுக்கு என் வீட்டுச் சாப்பாடு என்று எழுதிவிட்டார் போலிருக்கிறது" என்று மலர்ந்த முகத்துடன் கூறி அந்தப் பிராம்மணனையும் அழைத்துக் கொண்டு தன் வீட்டிற்கு சென்றார்.

அப்போது அவரது வீட்டுத் திண்ணையில் உள்ளூர் புரோகிதர் கைலாசம் ஏதோ மணியகாரரிடம் பேசக் காத்து உட்கார்ந்திருந்தார். அவர் மணியகாரரோடு வந்த பிராம்மணனைப் பார்த்து "நீ வேப்பத்தூர் வேம்பு சாஸ்திரியின் மகன்தானே" என்று கேட்டார். அவனும் "ஆமாம்! நீங்கள் யார் என்று தெரியவில்லையே?" என்று கேட்டான். கைலாசமும் "நான் ஒருவகையில் உன் சிற்றப்பா! நீ என் வீட்டுக்கு வா. தங்கிச் சாப்பிட்டு விட்டுச் சாவகாசமாகப் போகலாம்" என்று கூறினார்.

—சிவனார் செல்வன்—

மணியகாரரும் "பேஷ் பேஷ். அயலூர்காரராயிற்றே, என் வீட்டில் சாப்பாடு போட்டு இன்றிரவு தங்க வைத்து அனுப்பலாம் என்று நினைத்தேன் 'கடவுள் சித்தம் அப்படி இல்லை போலிருக்கிறது. இவரது சொந்தக்காரரை அனுப்பி இவருக்குச் சாப்பாடு உங்கள் வீட்டில்தான் என்று விதித்து விட்டார். சரி அழைத்துப் போங்கள்" என்று கூறி அந்தப் பிராம்மணனை கைலாசத்தோடு அனுப்பி வைத்தார்.

அவர்கள் போனதும் முனியன் மணியகாரரிடம் "யாருக்கு பகவான் எங்கு சாப்பாடு என்று நிர்ணயித்திருந்தாலும் என்னைப் பொறுத்தவரை என் வீட்டில் என் மனைவி சமைத்த சாப்பாடுதான் இன்றிரவு கிடைக்கப் போகிறது. இதில் சந்கேமே இல்லை" என்றான் சிரித்துக் கொண்டே.

மணியக்காரரோ "அப்படி உறுதியாகச் சொல்ல முடியாது. நீ சாப்பிடுவதற்குள் என்னென்ன நடக்குமோ யார் கண்டார்கள்? எல்லாம் அந்த பகவானின் இஷ்டப்படித்தான் நடக்கும்" என்றார். முனியனும் "அதையும்தான் பார்க்கலாமே" என்று சொல்லி விட்டுத் தன் வீட்டிற்குச் சென்றான்.

அவன் வீட்டை அடைந்து சாப்பிடத் தட்டின் முன் உட்கார்ந்தான். அவன் மனைவியும் "இன்று



சமைக்க எதுவுமே இல்லை. இருந்த அரிசியைப் போட்டு சாதமாக்கி தயிர் போட்டுப் பிசைந்து வைத்திருக்கிறேன். அதைப் போடுகிறேன்" என்று கூறித் தான் பிசைந்து வைத்திருந்த தயிர் சாதத்தை அவனது தட்டில் போட்டாள்.

அப்போது வீட்டுக் கதவை யாரோ தட்டவே முனியன் சட்டென எழுந்து யார் என்று பார்க்கச் சென்றான். அவன் மனைவியும் அவன்பின்னால் சென்றாள். இதற்குள் கொல்லைப் புறத்திலிருந்து ஒரு நாய் ஓடிவந்து முனியனுக்குத் தட்டில் வைத்திருந்த தயிர் சாதத்தைச் சாப்பிட்டுவிட்டு

ஓடி விட்டது. கணவனும் மனைவியும் வாசலில் வந்த அடுத்த வீட்டுக் காரரிடம் பேசி அவரை அனுப்பிவிட்டு வந்த போது தட்டு காலியாக இருப்பதையும் அதிலிருந்த சாதத்தைச் சாப்பிட்டு விட்டு ஓடும் நாயையும் பார்த்தார்கள்.

அப்போது முனியன் "சரிதான் போ. இன்று நமக்கு சாப்பாடு இல்லை என்றாகிவிட்டது" என்று கூறிச் சலித்துக் கொண்டான். அப்போது மறுபடியும் யாரோ கதவைத் தட்டியது கேட்டு முனியன் ஓடிப்போய்த் திறந்தான். அவன் தன் மாமனாரும் மாமியாரும் வந்திருப்பது கண்டு திகைத்துப் போனான்.

அவர்களை உள்ளே அழைத்துப் போய்த் தன் மனைவியிடம் விட்டு விட்டு அவர்களது சாப்பாட்டிற்கு என்ன வழி செய்வது என்று யோசிக்கலானான். ஏனென்றால் வீட்டில் சமைக்க எதுவுமே இல்லை என்று அவன் மனைவி அப்போதே சொல்லிவிட்டாளே.

அவன் யோசனையைக் கலைத்தவாறே அவன் மனைவி "என் அப்பாவும் அம்மாவும் ஸ்ரீரங்கம் கோயிலுக்குப் போனார்கள். அங்கே பெருமாள் தரிசனம் செய்துவிட்டு கோவில் பிரசாதமான புளியோதரையையும் சர்க்கரைப் பொங்கலையும் வாங்கிச் சாப்பிட்டு விட்டு நமக்கும் வாங்கிக் கொண்டு நம்மைப் பார்க்க வந்திருக்கிறார்கள்" என கூறிக் கொண்டே வந்தாள்.

அப்போது முனியன் "மணியகாரர் சொன்னது சரியாகிவிட்டது. கடவுள் ஒவ்வொரு வேளைச் சாப்பாட்டையும் இன்ன இடத்தில் இன்ன விதத்தில்தான் கிடைக்குமாறு செய்து விடுகிறார்தான்" என்று நினைத்துக் கொண்டே தன் மனைவியின் பின்னால் சாப்பிடச் சென்றான்.



# அம்புலிமாமா அனுபந்தம்—50



<u>நம் நாட்டுப் பறவைகளும், மிருகங்களும்:</u>

## காட்டுக்கழுதை

மூளையற்றவனைக் கழுதை என்று கேலி செய்வதும் திட்டுவதும் நமக்கெல்லாம் வழக்கமாகி விட்டது. உண்மையில் கழுதைகள் அறிவற்றவைகளல்ல. அவை குதிரை இனத்தைச் சேர்ந்தவை. அவற்றை வளர்ப்பவர்கள் கூறும் சொற்களை அவை புரிந்து கொள்கின்றன. ஆனால் சாதாரண மனிதன் என்றாலே அவை சங்கோசப்பட்டு ஒதுங்குகின்றன.

காட்டுக் கழுதைகள் நம் நாட்டில் மட்டுமே தென்படுபவை. இவை குஜராத் மாநிலத்தில் கச்-ரான் பகுதியில் காணக் கிடைக்கின்றன. ரான் சுமார் ஆயிரம் சதுர மைல் பரப்பளவுள்ள புல் கூட விளையாத பொட்டலாகும். முன் காலத்தில் பாரசீகத்திலும் சிரியாவிலும் இவை இருந்தனவாம். இப்போது அங்கு ஒன்று கூட இல்லாது அழிந்து போயின.

சுமார் நான்கடி உயரமுள்ள இந்த ஆசியக் காட்டுக் கழுதைகள் வாதாங்கொட்டை நிறத்தில் உள்ளன. கழுத்திலிருந்து வால்வரை ஊதாநிறக் கேசம் சடைகளாக உள்ளன. உடலின் அடிப்பகுதி வெள்ளையாக இருக்கும். இவற்றின் காதுகள் கழுதைக் குட்டிகளின் காதுகளை விடச் சிறியவை. காஷ்மீர லடாக் பகுதியில் காணப்படும் திபெத் காட்டுக் கழுதைகள் சிவப்பு நிறமானவை. காட்டுக் கழுதைகள் மனிதர்களைப் பார்த்தாலே 55 கி.மீட்டர் வேகத்தில் ஓடி மறைந்து கொள்கின்றன.



# நம் தற்கால இலக்கியம்

*பல மொழிகளையும், பல்விதப் பண்பாட்டுகளையும் கொண்ட நம் நாட்டில் ஒவ்வொரு மொழியிலும் உயரிய இலக்கியப்படைப்புகள் தோன்றி வருகின்றன. பலர் பண்டைய இலக்கியம் பற்றி அறிவார்கள். ஆனால் நம் நாட்டின் வெவ்வேறு மொழிகளில் வெளியாகும் தற்கால இலக்கியம் பற்றி அவ்வளவாக அறிந்திருக்க மாட்டார்கள். பல்வேறு இந்திய மொழிகளில் வெளியான உயர்ந்த கதைகள், புதினங்களின் சுருக்கத்தை இத்தொடரில் அளிக்கிறோம். இவற்றை இளைஞர்கள் உற்சாகத்துடன் படிப்பார்கள் என்றே நம்புகிறோம்.*

*ஆசிரியர்*

## ஆனந்தமூர்த்தியின் 'சம்ஸ்கார'



கர்நாடகத்தில் கடுமையாக ஆசாரங்களைக் கடைப்பிடிக்கும் ஒரு அக்கிரஹாரத்தில் பிராணே சாசாரியா என்ற பிராம்மணர் வாழ்ந்து வந்தார். அவர் வேதங்களை கற்ற பண்டிதர். பழங்கால பழக்க வழக்கங்களுக்கும் கடும் ஆசாரங்களுக்கும் கட்டுப்பட்டவர். அவரது மனைவி பக்கவாதத்தால் கால்கள் செயலற்றுப் போனாள். அதனால் அவளுக்கு அவர் பணிவிடை செய்து வந்தார்.

அதே அக்கிரஹாரத்தில் நாராயணப்பா என்ற இன்னொரு பிராம்மணரும் இருந்தார். அவர் நெறி தவறி ஆசாரங்களுக்குக் கட்டுப்படாமல் மதுவை அருந்தியும், மாமிசம் உண்டும், பெரியவர்களைச் சற்றும் மதியாமலும் இருந்து வந்தார். அவர் சந்திரி என்ற அழகான பெண்ணைத் தன் வீட்டோடு வைத்திருந்தார்.

ஒருநாள் நாராயணப்பா திடீரென இறந்து போனார். சந்திரி இதனை பிராணே சாசாரியாவுக்குத் தெரியப்படுத்தி ஈமச்சடங்குகளுக்கான ஏற்பாடுகளைச் செய்யுமாறு வேண்டினாள். ஆனால் அது ஒரு சிக்கலான பிரச்னையாக ஆயிற்று.



நாராயணப்பா பிராம்மண ஆசாரங்களை மீறியதால் ஆசார சீலர்களான பிராம்மணர்கள் அவரது உடலைத் தொடலாமா என்ற பிரச்னை எழுந்தது. அவருக்கு ஈமக் கிரியைகளைச் செய்வது பற்றி பெருத்த விவாதம் மூண்டது.

சந்திரி தன் நகைகளை எல்லாம் பிராம்மணர்களின் முன் வைத்து நாராயணப்பாவின் பூத உடலுக்கு தகனக் கிரியைகளைச் செய்யும்படி வேண்டினாள். ஆனால் பிராம்மணர்கள் அவளது வேண்டுகோலை ஏற்கத் தயங்கினார்கள்.

இதற்கு வழிகாண பிராணே சாசாரியாவே சாஸ்திர நூல்களைப் புரட்டிப் பார்த்தார். அப்போது அவருக்கு எவ்வழியும் தெரியவில்லை. சந்திரியிடம் அவர் நகைகளை எடுத்துக் கொண்டு போகும்படி கூறிவிட்டு அவர் அவ்வூர் கோயிலுக்குள் போய் அமர்ந்து யோசிக்கலானார். அவருக்கு எதுவும் தோன்றாததால் தம் வீட்டிற்குத் திரும்பலானார். வழியில் சந்திரியைக் கண்ட அவர் அவள்மீது இரக்கம் கொண்டார். அவள் பயபக்தியுடன் அவரது கால்களில் விழுந்து வணங்கினாள். அவர் அவளை அன்புடன் தொட்டுத் தூக்கினார். அப்போது அவருக்குச் சந்திரி மீது ஆசை ஏற்பட்டது.

சந்திரியைத் தொட்டபின் தன்னை பிராமணன் எனக்கூறிக் கொள்ள தனக்குத் தகுதி உள்ளதா என்று பிராணேசாசாரியா யோசிக்கலானார் சந்திரி பிராம்மணரல்லாதவர்களிடம் போய் நாராயணப்பாவிற்கு ஈமச்சடங்குகளைச் செய்யும்படி வேண்டினாள். அவர்களோ ஒரு பிராம்மணருக்கு ஈமச்சடங்குகளைத் தாம் செய்வது மகாபாவம் எனக்கூறி மறுத்துவிட்டார்கள்.

கடைசியில் சந்திரி ஒரு முஸ்லிமின் உதவியோடு நாராணப்பாவின் உடலைப் புதைத்தாள். அச்சமயம் பிராம்மணர்கள் நாராயணப்பாவின் உடலுக்கு ஈமக்கிரியைகள் செய்வது என முடிவு எடுத்து வந்தனர். ஆனால் அதற்குள் பிணம் புதைக்கப் பட்டு விட்டது.

பிராணேசாசாரியாவின் மனைவி இறந்து போனாள். தான் குற்றம்புரிந்து விட்டதாக எண்ணி அதன் பிறகு பிராணேசாசாரியா ஊரை விட்டு தேசாந்தரம் போய் விட்டார்.

கன்னடத்தில் பிரபல எழுத்தாளர் எஸ். ஆர். அனந்தமூர்த்தி 1931ல் பிறந்தார். ஆசாரம் என்ற பெயரிலுள்ள மூடநம்பிக்கைகளை இந்தப் புதினம் எடுத்துரைக்கிறது.

# உங்களுக்குத் தெரியுமா?

1. தென்னிந்தியாவில் ஒரே ஒரு இடத்தில் கற்குகையில் ஜைனர்களின் ஆலயம் உள்ளது. அது எங்கே?
2. 'பறக்கும் பாம்பு' என ஒருவகைப் பாம்பிற்கு ஏன் அப்பெயர் ஏற்பட்டது?
3. உலகில் மிக உயரமான இடத்தில் மலரும் மலர் எது?
4. 'ரெப்ரிஜெரேடரை' யார் கண்டு பிடித்தார்?
5. நம் நாட்டில் ஓடும் ஒரு ஆறுக்கு நான்கு பெயர்கள் உள்ளன. அந்த ஆறு எது? அப்பெயர்கள் என்ன?
6. நூல் நிலயத்தை நிறுவிய முதலாவது கிரேக்கர் யார்?
7. குருநானக் பக்திப் பாடல்களைப் பாடும் போது அவரது சீடர்களில் ஒருவர் அவரோடு இருந்து 'ரபாப்' வாசிப்பவர். அவர் யார்?
8. மனிதன் பொதுவாக ஒரு நிமிடத்திற்கு எவ்வளவு தடவை மூச்சு விடுகிறான்?
9. தமிழ் நாட்டில் மிக உயர்ந்த மலை உச்சி எது?
10. வெற்றி பெற்றவர் பின்னாலும் தோற்றவர் முன்னாலும் செல்லும் விளையாட்டு எது?

## விடைகள்

1. புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ள சித்தன்னவாசல்.
2. அது தன் உடலை ரிப்பன் போல நீட்டி ஒரு மரத்திலிருந்து மற்றொரு மரத்திற்கு வெற்று வெளியில் தாவிச் செல்வதால் ஏற்பட்ட பெயர்
3. உத்தரப் பிரதேஷ் கர்வால் மலைச் சாரலில் 6400 மீட்டர் உயரத்தில் மலரும் ஹெர்மோனியா ஹிமாலயோசிஸ்
4. ஜெர்மனியின் மூனிக் வாசி கார்லே லிண்டே பீடரிக் ஷிப்பர் 1870-ல் கண்டுபிடித்தார்
5. பிரம்மபுத்திரா இமயமலையிலுள்ள மானசசரோவரிலிருந்து உற்பத்தியாகி வங்காள விரிகுடாவில் விழும் வரை திபெத்தில் த்வாங்ஸா என்றும் அருணாசலப் பிரதேசத்தில் பாங்க், சியாங்சி என்றும் பங்களா தேசத்தில் மேகனா எனவும் பெயர் பெற்றுள்ளது.
6. யூரிபெடிஸ் (கி.மு 480-406)
7. 'மார்தன்' என்ற முஸ்லீம் சீடர்
8. 15-19 தடவைகள்
9. தமிழ்நாட்டில் கோவை மாவட்டத்திலுள்ள 'ஆனை முடி'
10. ஜூடோ



# உழைப்பே உயர்வு!

ஏழுமலைக்கும் வள்ளிக்கும் பிறந்த ஒரே மகன் கந்தன். அவன் நல்ல புத்திசாலி. ஆனால் எதையும் செய்யச் சோம்பலாக இருந்ததால் எல்லோரும் அவனை இளப்பமாகப் பேசினார்கள். ஒருநாள் வள்ளியின் தம்பி மருதன் தன் அக்காவைப் பார்க்கத் தன் ஊரிலிருந்து வந்தான். வள்ளி அவனிடம் கந்தனிடம் உள்ள குறையைக் கூறி வருத்தப்பட்டாள்.

மருதனுக்குக் கந்தன் மீது அலாதியான பிரியம். அவன் தன் மகளை கந்தனுக்குக் கல்யாணம் செய்து வைக்கவும் ஆசைப்பட்டான். அதனால் அவன் கந்தனுக்கு அறிவுரைகள் கூறினான். கந்தனோ தன் அம்மாவிடம் போய் "நான் ஒன்றும் மாமாவின் மகள் பவானியைக் கல்யாணம் செய்து கொள்ள மாட்டேன். அவர் என்னிடம் நயமாகப் பேசித் தன் பெண்ணை என் தலையில் கட்டப் பார்க்கிறார். நான் இந்த ஊர் பழனியப்பரின் மகள் ஜெயாவைத் தன் கல்யாணம் செய்து கொள்வேன்" என்றான்.

அதைக்கேட்டு வள்ளியும் மருதனும் திடுக்கிட்டார்கள். ஏனென்றால் பழனியப்பர் பல லட்சங்களுக்கு அதிபர். அவர் சாதாரணப் பணக்காரக் குடும்பத்தில் சம்பந்தம் செய்து கொள்ள விரும்பமாட்டாரே. அவர் எங்கே, தாம் எங்கே என்று அவர்கள் கந்தனுக்குக் எடுத்துச் சொல்லிப் பார்த்தார்கள்.

கந்தனோ "நானும் அவரைப் போலப் பல லட்சங்கள் சம்பாதிக்கிறேன். அப்போது அவரே தன் மகளை எனக்குக் கல்யாணம் செய்து வைக்க முன்வருவார். இதற்

—காரை. குருமூர்த்தி—



காக நான் பரமானந்த சுவாமி யைச் சந்தித்து அவரது அருளைப் பெறப் போகிறேன்'' என்றான். அது கேட்டு வள்ளி ''நீ நினைப் பது போல அவ்வளவு சுலபமாகப் பல லட்சங்களைச் சம்பாதிக்க முடியாது. பேசாமல் பவானியைக் கல்யாணம் செய்து கொண்டு சுகமாக இரு. நம்மிடம் போதிய பணம் இருக்கிறது. நீ சம்பாதித் துத்தான் குடும்பம் நடத்த வேண் டும் என்பது இல்லை'' என்றாள்.

கந்தனோ பிடிவாதமாகத் தான் ஜெயாவைத்தான் மணந்து கொள் ளப் போவதாகக் கூறிவிட்டு அதற் காகப் பரமானந்த சுவாமிகளைப் பார்க்கப் போவதாகச் சொல்லி விட்டுக் கிளம்பினான்.

அவன் பரமானந்தரின் ஆசிர மத்திற்குப் போய் அவரிடம் தன் பிரச்னையைக் கூறினான். அவர் புன்னகை புரிந்தவாறே ''அப் பனே! நீ எளிதில் பல லட்சங் களுக்கு அதிபனாக ஒரு வழி செய் கிறேன். இதோபார் ஒரு பை. இதில் நீ கைவிட்டு எடுத்தால் நீ விரும்பும் அளவிற்குப் பணம் கிடைக்கும். கையை விட்டுப் பார்'' என்றார். கந்தனும் அவர் கொடுத்த பைக்குள் கையை விட்டு எடுத்தான். கைநிறையத் தங்க நாணயங்கள் வந்தன.

அதுகண்டு கந்தன் மகிழ்ந்தவ னாய் ''சுவாமி! நான் இப்பையைப் பெறத் தகுதி பெற்றவன் எனக் கருதி எனக்கு கொடுத்தீர்களா?'' என்று கேட்டான். அவரோ ''அப் படி எல்லாம் இல்லை. உன் அறியாமையைக் கண்டு பரிதாபப் பட்டே இதை உனக்குக் கொடுத் திருக்கிறேன். கொஞ்ச நாட்களியே நீயே இதனை என்னிடம் திரும்பிக் கொடுத்து விடப்போகிறாய்'' என் றார்.

கந்தனும் பை கிடைத்த சந்தோ ஷத்தில் அவர் கூறியதைச் சரி யாகக் கேட்டுக் கொள்ளவில்லை. அவரை வணங்கி பையை எடுத் துக் கொண்டு தன் ஊருக்குத் திரும்பி வந்தான். கந்தனுக்குக் கிடைத்த அதிசயப் பை பற்றிய

தக்வல் ஊர் முழுவதும் பரவி விட்டது.

கந்தனின் நண்பன் மாணிக்கம் வந்து "கந்தா! என் மனைவி ரொம்ப நாட்களாகவே வைரத்தோடு வேண்டும் என்று ஆசைப் படுகிறாள். என்னாலோ அதற்கான பணம் சம்பாதிக்க முடியவில்லை. நீ உன் பையில் கையை விட்டு வைரத்தோடு வரவழைத்துக் கொடுத்தால் அவளைத் திருப்திப் படுத்துவேன். இது நீ எனக்குச் செய்யும் பேருதவியாக இருக்கும்" என்றான். கந்தனும் பைக்குள் கைவிட்டு வைரத்தோடு எடுத்து மாணிக்கத்திடம் கொடுத்தான்.



அது முதல் அவனது நண்பர்களின் தேவைகள் அதிகரித்தன. அவர்கள் எல்லோரும் கந்தனின் அணுகி தமக்கு வேண்டியவற்றைப் பெற்றுக் கொண்டார்கள். நாளுக்கு நாள் கந்தனிடம் உதவி கோரி வருவோரின் எண்ணிக்கை அதிகரிக்கலாயிற்று.

கந்தனும் தான் எல்லோருக்கும் தாராளமாக உதவி செய்ததால் தன்னைப் பெரிய பணக்காரனாக மதித்து பழனியப்பர் வலிய வந்து தன் மகளைக் கல்யாணம் செய்து கொள்ளுமாறு அவனை வேண்டுவார் என எதிர்பார்த்தான். ஆனால் அப்படி எதுவும் நடக்கவில்லை.

அப்போது கந்தனே ஒரு சிலரைப் பழனியப்பரிடம் அனுப்பி தன்னைப் பற்றி புகழ்ந்து கூறி அவர் மகளைத் தனக்குக் கொடுக்க வேண்டும் என்று யோசனை கூறச் சொன்னான். அவர்கள் சொன்னதைக் கேட்ட பழனியப்பரோ "நான் என் மகளைப் பணக்காரக் குடும்பத்தில்தான் கல்யாணம் செய்து கொடுக்க வேண்டும் என நினைக்கவில்லை. யார் உழைப்பின் மீது நம்பிக்கை வைத்து தன் சொந்த முயற்சியால் குடும்பம் நடத்தப் பணம் சம்பாதிக்கிறானோ அவனுக்குத்தான் என் மகளை கல்யாணம் செய்து வைப்பேன். ஒரு யோகியைக் குழையடித்து மந்திரப் பையை வாங்கி வந்து ஊரிலுள்ள

வர்களை எல்லாம் சோம்பேறிகளாக ஆக்கி வருபவனுக்கா என் மகளைக் கொடுப்பேன்! முடியவே முடியாது'' என்று பதில் கூறி அனுப்பி விட்டார்.

பழனியப்பர் கூறியதைக் கேட்டு கந்தன் மனம் உடைந்து போனான். ஜெயா தனக்குக் கிடைக்க மாட்டாள் என்பது தெளிவாகியதும் அவன் இனிமேல் பரமானந்தர் கொடுத்த பையால் தனக்கு எவ்விதப் பயனும் இல்லை என்றும் அதை வைத்துக் கொண்டிருந்தால் ஊரிலுள்ளவர்களின் நச்சரிப்பும் தொல்லையும் தான் அதிகரிக்கும் என நினைத்தான்.

அவன் அந்தப் பையை எடுத்துக் கொண்டு தன் தாயிடம் ''அம்மா! நான் என் மாமன் மகள் பவானியையே கல்யாணம் செய்து கொள்வதாகத் தீர்மானித்து விட்டேன். பழனியப்பரின் மகள் ஜெயாவை மணந்து கொள்ளப் போவதில்லை. இந்தச் செய்தியை என் மாமனுக்குச் சொல்லி அனுப்பு. இப்போது நான் பரமானந்தரின் ஆசிரமத்திற்குப் போகப் போகிறேன்'' என்றான்.

அதைக்கேட்ட அவனது தாய் ''என்னடா இது? கல்யாணம் என்றாய் அடுத்தாற்போல ஆசிரமம் என்கிறாயே. இதென்ன குழப்பம்?'' என்று கேட்டாள். அது கேட்டு கந்தன் பலமாகச் சிரித்து ''நான் ஒன்றும் ஆசிரமத்திற்குப போய் அங்கு நிரந்தரமாகத் தங்கி விடப் போவதில்லை. இந்த மந்திரப் பையை பரமானந்தரிடம் திருப்பிக் கொடுத்துவிட்டு உழைப்பின் பெருமையைத் தெரிந்து கொண்டதாகக் கூறப் போகிறேன். இனிமேல் சோம்பித் திரியாமல் உழைத்துக் கொண்டே இருப்பேன்'' என்றான்.

அதுகேட்டு அவனது தாயார் மகிழ்ந்து போனாள்.






# சிறுமியின் பதில்கள்

ஒரு நாளிரவு மன்னன் மகரசேனன் மந்திரி ஞானசேகரருடன் மாறு வேடத்தில் நகர் சோதனைக்குப் போனான். அப்போது ஒரு குடிசை யிலிருந்து ஒரு ஈனக் குரல் "மகளே! இனி உன் அம்மாவை அந்தக் கடவுள்தான் வந்து காப் பாற்ற வேண்டும்" எனக் கூறியது அவர்கள் காதில் விழுந்தது.

அதைக்கேட்ட மன்னன் இரக் கப்பட்டு அந்தக் குடிசை வாசலில் நின்று உள்ளே எட்டிப் பார்த் தான். அங்கு ஓரிடத்தில் ஒரு ஏழைக் குடியானவன் கன்னத்தில் கைவைத்துக் கொண்டு உட்கார்ந் திருந்தான். சற்று தூரத்தில் ஒரு தூணைக் கட்டிக் கொண்டு ஒரு சிறுமி அழுது கொண்டிருந்தாள். ஒரு பக்கமாய் ஒரு பாயின் மீது நோயாளியான ஒரு பெண் படுத் திருந்தாள். அவள் அக்குடியானவ னின் மனைவி.

யாரோ வாசலில் நின்றது கண்டு குடியானவன் எழுந்து வந் தான். மன்னன் அவனைப் பார்த்து "உனக்கு என்ன கஷ்டம்? சொல். நான் போக்குகிறேன்" என்றான். குடியானவனும் "நானோ ஏழை. என் மனைவி படுத்த படுக்கை யாய்க் கிடக்கிறாள். அவளுக்கு வைத்தியம் பார்க்க இருபது ரூபாய் தேவை. யாரைக் கேட்டா லும் இல்லை என்கிறார்கள். என்ன செய்வேன்?" என்றான்.

மன்னனும் "சரி. நான் உனக்கு இருபது ரூபாய் கடன் கொடுக் கிறேன். நீ அதை எப்போது எப் படித் திருப்பிக் கொடுப்பாய்?" என்று கேட்டான். குடியானவனும் "ஒரே மாதத்தில் வட்டியுடன் திருப்பிக் கொடுத்து விடுவேன்" என்றான்.

—வி. லாவண்யா—



மன்னனும் "சரி. நான் தரு கிறேன். எனக்கு வட்டி வேண்டாம். இன்றைக்கு அமாவாசை. அடுத்த அமாவாசையன்று எனக்குப் பணம் கிடைக்க வேண்டும். நான் அன்று இந்த ஊர் பெரிய கோவி லின் முன் வாசலில் காத்திருப் பேன்" எனக் கூறி மந்திரியிட மிருந்து இருபது ரூபாய் வாங்கிக் குடியானவனிடம் கொடுத்தான். குடியானவனும் நன்றி செலுத்தி அதனை வாங்கிக் கொண்டான்.

அந்தப் பணத்தைக் கொண்டு அவன் வைத்தியம் செய்து தன் மனைவியை குணப்படுத்தினான். தினமும் கூலி வேலை செய்தான். ஒரு மாதத்திற்குள் இருபது ரூபாய் சேர்க்க முயன்றான். ஆனால் அவனால் அந்த ஒரு மாதத்திற் குள் பதினெட்டு ரூபாய்தான் சேர்க்க முடிந்தது. அதனால் அமாவாசை அன்று அவன் பெரிய கோவிலுக் குப் போகவில்லை.

ஒரு மாதமானதால் அமாவாசை யன்று மாலை மன்னனும் மந்திரி யும் குடியானவனுக்காகப் பெரிய கோவிலில் காத்துப் பார்த்தனர். அவன் வராது போகவே மறுநாள் அவர்கள் மாறுவேடம் அணிந்து மாலையில் அக்குடியானவனின் குடிசைக்குச் சென்றார்கள். அவர் களைப் பார்த்ததும் குடியானவனின் மகள் "கண்ணுக்குத் தெரியாதது உள்ளே நன்றாக இருக்கிறது. எங்கும் வெளிச்சமே. இருட்டே இல்லை" என்றாள்.

மன்னனுக்கு அவள் சொன் னது எதுவும் புரியவில்லை. அவன் மந்திரியைப் பார்க்க அவர் புன் னகை புரிந்து தலையை ஆட்டி "பெண்ணே! உன் தந்தை எங்கே" என்று கேட்டார். அவளும் "மேலே ஏறி சூரிய பகவானின் கண்களை மூடப் போயிருக்கிறார்" என்றாள். அடுத்து அவர் "உன் தாயார் எங்கே?" என்று கேட்டார். அவ ளும் "தூணின் மேலுள்ள நீர் எடுத்துப் பணம் கொண்டு வரப் போயிருக்கிறாள்" என்றாள்.

அதுகேட்டு மந்திரி சிரித்து "அப்படியானால் நீ என்ன செய்

கிறாய்?" என்று கேட்கவே அவளும் "தங்கத்தை வெள்ளியாக்கி நெருப்பின் மீது வைத்தேன். எல்லாம் தாங்கும் பொருளுக்கு மெருகு போடுகிறேன்" என்றாள்.

அப்போது மந்திரி "நாங்கள் இன்று வருவோம் என்பது உன் தந்தைக்குத் தெரியுமா?" என்று கேட்டார். அவளும் "ஓ! தெரியும். இரண்டு குறைந்ததால் பத்து பேர் வாய்க்கு வெட்கப்பட்டு கையால் காட்டுகிறேன் என்று கூறி உங்களை மூன்று முறை கண் மூடிக் கண் திறக்கும்படிச் சொல்லச் சொன்னார்" என்றாள்.



அப்போது மந்திரி "நாங்கள் யாரென்று உனக்குத் தெரியுமா?" எனக் கேட்க அவளும் "தெரியும். நீங்கள் 'காகாகாகோ'" என்று கூறிப் பணிவுடன் வணங்கினாள். அவரும் "சரி. நீ போய் உன் வேலையைக் கவனி" எனக் கூறிவிட்டு மன்னனிடம் "இனி நாம் போகலாம்" என்றார். இருவரும் அங்கிருந்து கிளம்பினார்கள்.

வழியில் மன்னன் மந்திரியிடம் அவள் என்ன சொன்னாள் என்று புரியவில்லையே விளங்கச் சொல்லுங்கள்" என்று கேட்டுக் கொண்டான்.

மந்திரியும் "அந்த சிறுமி ஏழை வீட்டில் பிறந்த போதிலும் மிகவும் புத்திசாலியாக இருக்கிறாள். அவள் சொன்னதன் பொருள் இது தான். கேளுங்கள்" என்று கூறி விளக்கலானார்.

"கண்ணுக்குத் தெரியாதது என்பது உயிர். அது உடலில் நன்றாக இருக்கிறது என்று கூறி தாம் சுகமாகவும் கஷ்டப்படாமலும் இருப்பதாகக் கூறினாள். சுகம் என்பதை வெளிச்சம் என்றும் கஷ்டம் என்பதை இருட்டு என்றும் அவள் குறிப்பிட்டாள். அடுத்து அவள் தந்தை எங்கே என்று கேட்டபோது ஒரு வீட்டுக் கூரை மேயப் போயிருக்கிறார் என்றாள். கூரையில் ஓட்டைகள் இருந்தால் அவற்றில் சூரிய வெளிச்சம் புகுந்து கண்கள் வடிவில் வெய்யில் விழும். கூரை

மீதேறி அந்த ஓட்டைகளை அடைத்துக் கூலி பெறுகிறார் என்பது அதன் பொருள். அவள் தாயாரைப் பற்றிக் கேட்டபோது கம்ப நீர் எடுத்துப் பணம் எடுக்கப் போனாள் என்றாள். கம்பம் என்றால் பனை மரம். அதன் நீர் பதனீர். அதனை விற்றுக் காசு சம்பாதிக்கப் போயிருக்கிறாள் என்று அவள் தன் தாயைப் பற்றிக் கூறியதாம். அடுத்து அவள் தங்கத்தை வெள்ளியாக்கியது என்பதற்கு தங்கநிற நெல்லிலிருந்து வெள்ளிநிற அரிசி எடுத்து அதைச் சமைத்துக் கொண்டிருக்கிறாள் என்று பொருள். எல்லாவற்றையும் தாங்கும் பொருள் என்பது பூமி. அவள் அதனை மெருகு இடுகிறாள் என்றால் தரை மெழுகிக் கோலம் போடுகிறாள் என்பதாகும். அடுத்து அவளது தந்தையால் பதினெட்டு ரூபாய்தான் சேர்க்க முடிந்ததாம். இரண்டு ரூபாய் இருபதிற்குக் குறைவதால் வெட்கப்பட்டு நம்மை சந்திக்க வரவில்லையாம். மூன்று முறை கண் மூடித் திறப்பது என்பது மூன்று நாட்களைக் குறிக்கும். மூன்று நாள் கெடு அவர் கேட்கிறார் என்று அவள் சொன்னாள். நாம் யார் என்று கேட்டதற்கு காகா காகோ என்றாளே. அதன் பொருள் காவல் காத்துக் காக்கும் கோமகன் என்று பொருள்'' என்றார்.

மன்னன் அச்சிறுமியின் கூரிய அறிவைப் பாராட்டினான். அவன் மறுநாளே அக்குடியானவனைத் தன் தர்பாருக்கு அழைத்துவரச் சொன்னான். அவனிடம் மன்னன் ''நீ எனக்குக் கொடுக்க வேண்டிய கடனைக் கொடுக்க வேண்டாம். உன் மகளின் கூரிய அறிவைப் பாராட்டுகிறேன். அவளுக்குப் பரிசாக ஆயிரம் பவுன்கள் கொடுக்கிறேன்'' எனக்கூறி ஆயிரம் பொற்காசுகள் கொண்ட பையை அவனுக்குக் கொடுத்து அனுப்பினான்.






அனுமார் தங்கு தடையின்றி பாதாளலோகத்தின் தலைவாசலைத் தாண்டி நகருக்குள் சென்றார். அப்போது ஓரிடத்தில் ஒரே ஆரவாரமும் கோலாகலமாய் சத்தம் வருவது கேட்டு அவர் அத்திசையில் சென்றார்.

அங்கு ஒரு மலைக் குகை பெரிய காளிகோவிலாக அமைக்கப்பட்டிருந்தது. ஆலயத்தைச் சுற்றித் தோரணங்கள் கட்டப்பட்டிருந்தன. விளக்குகள் வரிசையாக வைக்கப்பட்டு ஏற்றப்பட்டிருந்தன. மயில் ராவணனது வீரர்கள் மதுக் குடங்களை வைத்து அவற்றைச் சுற்றிச் சுற்றி வந்து கொம்மாளம் போட்டு உரத்த குரலில் பாடிக் கொண்டும் ஆடிக் கொண்டும் இருந்தார்கள்.

கோவிலின் முன் தாரை, தம்பட்டைகள் முழங்கிக் கொண்டிருந்தன. இராமரையும் இலட்சுமணனையும் விடியும் வேளையில் பலியிடப் போகிறார்கள் என அனுமார் தெரிந்து கொண்டார். எனவே அவர் சிறு பல்லியாகத் தம் உருவை மாற்றிக் கொண்டு ஆலயத்தின் கர்ப்பக் கிரகத்தினுள் சென்றார். அங்கு காளிதேவியை அபிஷேகம் செய்ய நீர், பால், எண்ணெய் போன்றவை பாத்திரங்களில் வைக்கப்பட்டிருந்தன.

காளிவிக்கிரகத்திற்கு எதிர்ப்புறத்தில் வட்ட வடிவில் ஒரு யந்தி



ரம் வைக்கப்பட்டிருந்தது. அனுமார் அதைப்பார்த்துவிட்டு உள்ளே வந்தார். காளிதேவியின் விக்கிரகம் பார்க்க பயங்கரமாக மிகப் பெரிதாக இருந்தது. அனுமார் அதன் முன் நின்று 'காளிதேவியே! நீ இராமரையும் இலட்சுமணனையுமா பலி கேட்கிறாய்?' என்று கோபத்தோடு கேட்டார்.

அப்போது காளிதேவி அவர் முன் தோன்றி "அனுமானே! மயில் ராவணனின் மரணம் விரைவில் ஏற்படபோகிறது. நீ உன் முயற்சியில் வெற்றி பெறுவாய்" என்று கூறி மறைந்தாள். அது கேட்டு அனுமார் மகிழ்ந்து கர்ப்பக்கிரகத்தின் கதவுகளை மூடிவிட்டுக் காளி தேவியின் விக்கிரகத்தின் பின்னால் மறைந்து இருந்தார்.

இதே சமயம் மயில் ராவணனின் அந்தப்புரத்தில் தடபுடலான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. இராமரையும் இலட்சுமணனையும் பலியிட்ட பிறகு மயில் ராவணன் சந்திரசேனையை மணக்கவே அவை செய்யப்பட்டன. அந்தப் புர நிர்வாகத்திற்கும் பொறுப்பாளியான கண்டகிஎன்ற அரக்கி சந்திரசேனையை அலங்கரிக்கலானாள். அவள் மயில்ராவணனை மணப்பது மாபெரும் பாக்கியம் எனக்கூறி அவனது அருமை பெருமைகளை சந்திரசேனைக்கு விவரமாகச் சொல்லிக் கொண்டிருந்தார்.

அரண்மனை முற்றத்தில் ஒரே அமளி. பதுமையாக்கப்பட்ட இராமருக்கும் இலட்சுமணனுக்கும் அவர்களது சுயஉருவம் கிடைக்கச் செய்தார்கள். அவர்களை ஒரு வண்டியில் ஏற்றி உயரமான கோல்களில் கட்டி விட்டார்கள். அவர்களுக்கு செவ்வரளி மாலைகளைப் போட்டிருந்தார்கள். அந்த வண்டியைப் பாம்புகள் இழுக்கலாயின. இராமரையும் இலட்சுமணனையும் ஊர்வலமாகக் காளி கோவிலுக்கு சென்றார்கள்.

திடீரென ஏற்பட்ட பெருத்த சத்தம் கேட்டு சந்திரசேனைச் சட்டென எழுந்து போய் அதற்குக்

காரணம் என்ன என்று பார்த் தாள். இராமரும் இலட்சுமணனும் கட்டப்பட்டு இழுத்துச் சொல்லப் படுவது கண்டு அவள் அரண்மனை யிலிருந்து வெளியே ஓடினாள். அந்தக் காட்சியைக் காணச்சகியா மல் அவள் தன்நினைவை இழந்து விழுந்து விட்டாள்.

அவள் பின்னாலேயே ஓடி வந்த கண்டகி ஆத்திரம் கொண்டு நினைவு இழந்து கீழே விழுந்து கிடக்கும் சந்திரசேனையைச் சவுக் கால் அடித்தாள். சந்திரசேனை யின் உடல் சற்றும் அசையாதது கண்டு அவள் சற்றுப் பயந்து சந் திரசேனையைத் தூக்கிக் கொண்டு அரண்மனைக்கு சென்றாள். அங்கு ஒரு அறையில் அவளைப் படுக்க வைத்தாள்.

அதன்பின் அவள் காளிகோவி லுக்குச் சென்றாள். ஏனெனில் காளிகோவிலில் அர்ச்சனை செய் பவளும் அவளே. மயில் ராவண னுக்கும் அஹி ராவணனுக்கும் அவள்தான் தேவியின் பிரசாத மாக மதுவை எடுத்துக் கொடுக்க வேண்டும்!

காளிதேவிக்கு அபிஷேகம் நடந்தது. மதுவாலும் அபிஷேகம் நடக்கவே அனுமார் தன் உரு வைப் பெரிதாக்கி ''அதை நிறுத் திப் பால் அபிஷேகம் செய்யுங் கள்'' என உரக்கக் கூவினார். காளிதேவிதான் குரல் கொடுக்கி



றாள் என ராட்சஸர்கள் எண்ணி அமைதியாக அதைக் கேட்டனர். காளி மது வேண்டாம் எனக்கூறி யது அவர்களுக்கு ஆச்சரியத்தை அளித்தது.

ராட்சஸர்கள் பெரிய பெரிய பாத்திரங்களில் பாலை எடுத்து வந்தார்கள். காளிதேவிக்குப் பால் அபிஷேகம் நன்கு நடந்தது. ஆனால் அபிஷேகம் செய்த பாலை அனு மாரே குடிக்கலானார். அதனால் அவருக்குப் புதிய பலம் கிடைத் தது போல ஆயிற்று. உற்சாகமும் பன் மடங்காகப் பெருகியது.

மயில் ராவணன் கர்ப்பக்கிருக வாசலில் நின்று ''காளிதேவியே! உன் மனம் குளிர அபிஷேகம்



செய்து விட்டேன். இனி நீ எனக்கு உன் தரிசனம் கொடு'' என்று வேண்டினான். அப்போது விக்கிரகத்திலிருந்து ''மயில் ராவணனா! முதலில் உன் அண்ணன் கர்ப்பக்கிருகத்துள் வந்து மலர்களால் அர்ச்சனை செய்யட்டும்'' என்று குரல் ஒலித்தது.

மயில் ராவணனும் ''அண்ணா நீ என்றால் காளி தேவிக்கு எவ்வளவு பிரியம் என்று பார்த்தாயா? முதலில் நீ உள்ளே போய் அர்ச்சனை செய்'' என்று கூறினான். அஹிராவணன் மலை போன்ற உடல் கொண்டவன். அவன் ஒரு யானை போல ஆடி அசைந்து அர்ச்சனைத் தட்டையும் நைவேத்திய பதார்த்தங்களையும் எடுத்துக் கொண்டு கர்ப்பக் கிருகத்தின் வாசலை அடைந்தான்.

அனுமார் முன்னதாகவே உள் தாழ்ப்பாளை விலக்கி இருந்தார். அஹிராவணன் கர்ப்பக்கிருகத்துள் வந்ததும் கதவுகள் மூடிக் கொண்டன. அஹிராவணன் நைவேத்திய பதார்த்தங்களை தேவியின் முன் குனிந்து வைக்கலானான். அப்போது அனுமார் சட்டெனப் பாய்ந்து அவன் கழுத்தைப் பிடித்து நெரித்தார். அவன் மூச்சுத் திணறி இறந்தான்.

அனுமார் அஹிராவணன் கொண்டு வந்த நைவேத்திய பதார்த்தங்களை எடுத்து வயிறார உண்டார். அபிஷேகப் பாலைக் குடித்தார். அவர் மனம் சந்தோஷத்தில் பூரித்தது.

அவர் அஹிராவணனின் உடலை உதைத்து கர்ப்பக்கிருகத்தின் இருட்டான ஒரு மூலையில் போய் விழச் செய்தார். அதன்பிறகு அவர் ''மயில் ராவணா! இப்போது இராமரையும் இலட்சுமணனையும் கர்ப்பகிருகத்துள் அனுப்பு. என்பக்தனான அஹிராவணன் அவர்கள் கையில் மலரைக் கொடுத்து எனக்கு அர்ச்சனை செய்விக்க வேண்டும்'' எனக் காளி தேவி குரல் கொடுப்பது போலக் கூறினார். பிறகு கர்ப்பக் கிருகத்தின் உள்தாழ்ப்பாளை அவர்



விலக்கியும் வைத்தார்.

மயில் ராவணன் இராமரையும் இலட்சுமணனையும் இழுத்து வந்து கர்ப்பக்கிருகத்துள் தள்ளினான். காளி விக்கிரகத்தின் பின்னால் மறைந்திருந்த அனுமார் மெல்லிய குரலில் "ரகுகுலோத்தமர்களே! முதலில் கர்ப்பக கிருகக் கதவை உட்புறமாகத் தாழ் போடுங்கள்" என்றார்.

அதைக் கேட்ட இலட்சுணன் ஆச்சரியத்துடன் இராமரைப் பார்த்தான். இராமரும் "தம்பி இன்னமும் உனக்குப் புரியவில்லையா? முதலில் கதவைத் தாழ் போட்டு விட்டு வா" என்றார்.

இலட்சுமணனும் அவ்வாறு செய்ததும் "இனி நீங்கள் இருவரும் விக்கிரகத்திற்குப் பின்னால் வாருங்கள்" என்ற குரல் ஒலித்தது. அவர்கள் இருவரும் விக்கிரகத்தின் பின்னால் சென்றார்கள். அங்கு அவர்கள் அனுமாரைக் கண்டதும் ஒரேயடியாக மகிழ்ந்து போனார்கள்.

அனுமார் அவர்களுக்குக் காளி தேவியின் விக்கிரகத்தின் பாதங்களில் வைக்கப்பட்டிருந்த வில் அம்புகளையும் மற்ற ஆயுதங்களையும் காட்டினார். இராமரும் இலட்சுமணனும் ஆளுக்கு ஒரு வில்லையும் அம்பைகளையும் எடுத்துக் கொண்டார்கள்.

அனுமார் தன் உருவைப் பெரிதாக்கி அவர்கள் இருவரையும் தன் தோள்களில் ஏற்றி உட்கார வைத்துக் கொண்டார். கர்ப்பக்கிருகத்திற்கு வெளியே ராட்சஸர்களின் அமளி தூள் பறந்தது. அவர்கள் இராமரும் இலட்சுமணனும் பலியிடப்படுவதைக் கண்டுகளிக்கத் துடித்துக் கொண்டிருந்தார்கள்.

பலிகொடுப்பதற்காகக் குறிக்கப்பட்ட முகூர்த்த வேளையும் கடந்து விட்டது. ஏன் இன்னமும் இராமரையும் இலட்சுமணனையும் அஹிராவணன் கர்ப்பக்கிருகத்திலிருந்து வெளியே கொண்டு வரவில்லை என்றே எல்லோர் மனதிலும் கேள்வி எழுந்தது.



கண்டகி அதைக் கேட்டு எரிச்சல் கொண்டு "அட முட்டாள்களா! நம் கண் முன்னாலேயே பெரிய மோசவேலை நடந்திருக்கிறது. நம் எதிரிகளின் கை ஓங்கி விட்டது. நம் இரகசியங்களை நம் எதிரிகளுக்குக் கூறியவள் சந்திரசேனையாகத்தான் இருக்க வேண்டும். அவளைச் சவுக்கால் அடி அடி என்று அடித்தால் உண்மையைக் கக்கி விடுவாள்" என்று கூறியவாறே அரண்மனையை நோக்கி ஓடினாள்.

கண்டகி கூறியது கேட்டு ராட்சஸர்கள் திகில் அடைந்தார்கள். கர்ப்பக்கிருகத்தில் எந்த எதிரி இருக்கிறான் என்ற கேள்வியே எல்லோர் மனதிலும் எழுந்தது. மயில் ராவணனின் பலத்த கட்டுக் காவல்களையும் மீறி வந்துவிட்ட அந்த எதிரி யார் என எல்லோரும் யோசிக்கலானார்கள்.

ஒரு சில ராட்சஸர்கள் துணிவுடன் கர்ப்பக்கிருக வாசலை அடைந்தார்கள். அவர்கள் கர்ப்பக்கிருகக் கதவைத் திறக்க முயன்றபோது உள்ளே இருந்த அனுமார் சிங்கம் போலக் கர்ஜித்து அக்கதவை உதைத்துத் தள்ளி அங்கிருந்து வெளியே வந்தார்.

அனுமாரைக் கண்ட ராட்சஸர்கள் "ஆ! இதென்ன மோசம்" என்று கத்தினார்கள். அனுமாரின் தோள்களில் அமர்ந்திருந்த இராம

இதில் ஏதோ சூது நடந்திருக்க வேண்டும் என்று கண்டகிதான் முதலில் நினைத்தாள். எனவே கர்ப்பக்கிருகத்தின் வாசலுக்குப் போய் அவள் கதவு சந்தின் வழியாக உள்ளே என்ன நடக்கிறத என்று பார்த்தாள். அபிஷேகப் பால் எங்குமே தென்படவில்லை. நைவேத்தியப் பொருள்களையும் காணோம். அஹிராவணன் எங்கே இருக்கிறான் என்றும் தெரியவில்லை.

கண்டகி "ஆ! இதென்ன?" என்று உரக்கக் கூவினாள். உடனே பல ராட்சஸர்கள் "என்ன விஷயம்? கர்ப்பக்கிருகத்தினுள் என்ன பார்த்தாய்?" என்று கேட்டார்கள்.

ரும் இலட்சுமணனும் ராட்சஸர்கள் மீது அம்புகளைப் பொழிந்தார்கள். ராட்சஸர்கள் அலறிப்புடைத்துக் கொண்டு ஓடினார்கள்.

திடீரென ஏற்பட்ட அமளி கண்டு மயில் ராவணன் திரும்பிப் பார்த்தான். இராமரும் இலட்சுமணனும் அனுமாரின் தோள்களில் உட்கார்ந்திருப்பது கண்டு கோபம் கொண்டு அவர்களைத் தாக்கலானான். அவர்களும் அம்புகளை எய்து மயில் ராவணனைத் தாக்கினார்கள். அவர்களது அம்பு மயில்ராவணனின் உடலைக் காயப் படுத்தியது. அவனது உடலிலிருந்து ரத்தம் தரை மீது விழவே ஒவ்வொரு சொட்டு ரத்தத்திலிருந்தும் ஒரு மயில்ராவணன் வெளி வரலானான். அந்த எல்லா மயில் ராவணர்களும் இராமரையும் இலட்சுமணனையும் தாக்கலானார்கள்.

இராமரும் இலட்சுமணனும் அனுமாரிடம் இதென்ன மாயம் எனக் கேட்டபோது அவருக்கு சுவர்ச்சா தேவி கூறியது நினைவிற்கு வந்தது. அவர் சுருக்கமாக இராமரிடம் கூறி "நான் போய்ச் சந்திரசேனையைப் பார்த்து வருகிறேன். நீங்கள் போர் புரிந்து கொண்டிருங்கள்" எனக்கூறி விட்டு அவர்களை இறக்கிவிட்டு ஆகாயமார்க்கமாய்ச் சென்றார்.

அவர் இராமரையும் இலட்சுமணனையும் மயில்ராவணனிடமிருந்து காக்க மயில் ராவணனின் உயிர் நிலை என்ன என்றும் அதனை அழிப்பது எப்படி என்றும் அறிய விரும்பினார். அது சந்திரசேனைக்குத் தெரிந்திருக்கும் என்றும் அதை அறியவே அவர் சந்திர சேனையைக் காண விரைந்து சென்றார்.

இராமரும் லட்சுமணனும் ஒரு உயர்ந்த இடத்திலிருந்து அம்புகளை எய்து ராட்சஸர்களை அழித்துக் கொண்டிருந்தார்கள். அனுமாரோ சந்திரசேனை இருக்கும் அரண்மனைக்குச் சென்றார்.






சூரவர்மன் என்ற மன்னனுக்குத் தான் சக்கரவர்த்தியாக வேண்டும் என்ற ஆசை உண்டாகியது அதைத் தன் மந்திரியான சாந்தசீலரிடம் கூறினான். அவரோ "அரசே சக்கரவர்த்தி ஆகப் பல நாடுகளோடு போர் தொடுக்க வேண்டும். போரால் பொருள் சேதம் உயிர்ச் சேதம் என்பதோடு மானமும் போய்விடும். போரால் நாடு பாழடைந்து விடும். எனவே போருக்குச் செலவிடுவதை நாட்டின் நலனுக்குச் செலவிடுங்கள்" என்று அறிவுரை கூறினார்.

சூரவர்மனோ "நான் பல நாடுகளை வென்று சக்கரவர்த்தியானால் எனக்கு எவ்வளவு பெருமை! எனக்கு அந்த மன்னர்களும் கப்பம் கட்டுவார்கள். அப்போது ஏராளமான பணம் நம்மிடம் சேர்ந்துவிடும். அதனால் நம் நாட்டையும் செழிப்புடன் விளங்கச் செய்யலாம்" என்றான்.

சூரவர்மனுக்கு மந்திரியின் அறிவுரை பிடிக்கவில்லை. அதனால் அவரை மந்திரிப் பதவியிலிருந்து நீக்கிவிட்டுத் தன் போக்கிற்கு அனுசரணையாகப் போகும் பலவீரன் என்பவனைத் தன் மந்திரியாக்கிக் கொண்டான். பலவீரன் வெகுநாட்களாகவே தான் அந்நாட்டின் மன்னனாகிவிட வேண்டும் என்று ஆசை கொண்டிருந்தான். அவனுக்கு இப்போது சரியான வாய்ப்பு கிடைத்துவிட்டது.

பலவீரன் ஒருநாள் சூரவர்மனிடம் "நீங்கள் சக்கரவர்த்தி ஆக வேண்டும் என்றால் நம்மிடம் இருக்கும் படைகள் போதாது. மற்ற அரசர்களிடம் நம்மைவிட அதிகப் பலமுள்ள படைகள் உள்ளன. அவர்களை எல்லாம் வெல்ல

—பாபநாசம் சாமா—



வேண்டுமானால் நமக்கு அபூர்வ சக்தி வேண்டும். அது தவவலிமை கொண்டவர்களின் தயவால் கிடைக்கும். நம் நாட்டு எல்லையில் பைரவ மலை உள்ளது. அங்கு தவம் செய்யும் பைரவரிடம் நீங்கள் அபூர்வ சக்தியைக் கேட்டுப் பெறலாம்'' என்றான்.

பைரவ மலையில் வாழும் பைரவன் ஒரு ராட்சஸன். அவன் அந்த மலையில்தான் வாழமுடியும். எந்த ஒரு நாட்டிலும் அடி எடுத்து வைக்க வேண்டும் என்றால் அதற்கு அந் நாட்டு அரசனிடம் அனுமதி பெற்றால்தான் முடியும் என்ற சாபம் அவனுக்கு இருந்தது. அதனால் அவனுக்கு பயந்து யாருமே அந்த ராட்சஸன் வாழும் மலைக்குப் போவதில்லை.

பலவீரன் சொன்னதைக் கேட்ட சூரவர்மன் ''அந்த பைரவன் ஒரு ராட்சஸன் என்றல்லவா எல்லோரும் கூறுகிறார்கள். நீயோ முனிவர் என்கிறாயே'' எனக் கேட்டான். பலவீரனும் ''எல்லோரும் அங்கு வந்து தமக்கு அரியச் சக்திகளைக் கேட்டு நச்சரிப்பார்களே என்பதற்காக அவர் தாம் ராட்சஸர் என்று கூறி தம் உருவையும் ராட்சஸன் போல மாற்றிக் கொண்டிருக்கிறார். இந்த ரகசியத்தை எனக்கு அவரது பிரதம சீடரே சொன்னார்'' என்றான்.

பலவீரன் சூரவர்மனை பைரவ மலைக்குப் போகச் சொன்னது அவனை ஒழிக்கத்தான். பைரவ மலைக்குப் போனால் ராட்சஸன் சூரவர்மனைப் பிடித்து விழுங்கி விடுவான். அதன்பிறகு தானே அந்நாட்டின் மன்னனாகி விடலாம் என்று எண்ணியே அவன் அவ்வாறு கூறினான்.

சூரவர்மனும் பலவீரனை நம்பித் தன் ஆட்சியை பலவீரனிடம் ஒப்படைத்துவிட்டு பைரவ மலைக்கு சென்றான். பலவீரன் நாடு தனக்குக் கிடைத்துவிட்டதால் மகிழ்ந்து போனான். பைரவ மலைக்குப் போனால் சூரவர்மன் ராட்சஸனுக்கு இறையாகி விடுவான் என்பதே அவன் நினைப்பு.

சூரவர்மன் சிரமப்பட்டு பைரவ மலை மீது ஏறினான். அவன் மிகவும் களைத்துப் போனதால் ஒரு மரத்தின் கீழ் உட்கார்ந்து இளைப்பாறலானான். அப்போது அவன் முன் ஒரு ராட்சஸன் குதித்து அவனை விழுங்கப் போவது போல பயங்கரமாகத் தன் கண்களை உருட்டிப் பார்த்தான்.

சூரவர்மனோ பைரவன் ஒரு சக்தி வாய்ந்த முனிவர் என்று பலவீரன் சொன்னதை நம்பித் தானே அங்கு வந்தான். அதனால் அவன் ராட்சஸனைக் கண்டு பயப்படாமல் "மாமுனிவரே! நான் இந்த மலையை அடுத்துள்ள நாட்டின் மன்னன். என் பெயர் சூரவர்மன். தாங்கள் இந்த கோர ரூபத்தை விட்டு எனக்கு அருள் புரிய வேண்டும்" என்று கூறிப் பணிவுடன் வணங்கினான்.

அதைக் கேட்ட ராட்சஸன் ஆச்சரியப்பட்டு "பைரவனான ராட்சஸ்ன் நான். என்னை நீ முனிவர் என்றா நினைக்கிறாய்? நீ எனக்கு உணவாக வேண்டியவனே. நீ அரசன் என்பதால் உன்னை ஒரு நிபந்தனையின் பேரில் விட்டு விடுகிறேன். நீ என்னை உன் மந்திரியாக்கிக் கொண்டு உன் நாட்டிற்கு அழைத்துச் செல். என் ஆலோசனைப்படித்தான் நீ நடக்க வேண்டும். இதற்கு நீ சம்மதிக்கா விட்டால் உன்னை நான் இப்போதே




விழுங்கப் போகிறேன்" என்றான்.

சூரவர்மனுக்கு என்ன செய்வது என்றே தெரியவில்லை. பைரவன் முனிவர் அல்ல. ராட்சஸன்தான் என்பது தெரிந்து போயிற்று. ஒரு ராட்சஸன் தனக்கு மந்திரியாக இருக்கிறான் என்பதை மற்ற நாட்டு மன்னர்கள் அறிந்தால் கதி கலங்கிப் போவார்களே. இவ்வாறு அவன் யோசிக்கையில் பைரவன் "உம் சட்டென உன் முடிவை கூறு. எனக்கு ஒரே பசியாக இருக்கிறது" என்று பயமுறுத்தினான்.

சூரவர்மனும் "உன் போன்றவன் எனக்கு மந்திரியாக இருப்பது மிகவும் நல்லதே. ஆனால் உன்னை



இந்த ராட்சஸ உருவில் அழைத்துப் போவது சரியா என்றுதான் யோசிக்கிறேன்'' என்றான். பைரவனும் ''கவலைப்படாதே. நான் விரும்பும் உருவை எடுக்க முடியும். சாதாரண மனித உருவில் உன்னோடு வருகிறேன்'' என்றான்.

சூரவர்மன் அவனிடம் ''உன் நிபந்தனையை ஏற்கிறேன். ஆனால் உனக்கு ஏதோ ஒரு சாபம் இருப்பதாகச் சொன்னார்களே'' எனவே பைரவனும் ''ஆமாம். நான் பைரவ மலையில்தான் இருக்க வேண்டும். அதைவிட்டு எந்த நாட்டிலும் அந்நாட்டின் அரசனது அனுமதி இல்லாமல் அடி எடுத்து வைக்க முடியாது. மீறி வைத்தால் என் தலை வெடித்து இறந்துவிடுவேன். நீ என்னை உன் மந்திரியாக்கி உன்னோடு அழைத்துச் செல்வதால் இப்போது எனக்கு உன் அனுமதி கிடைத்து விட்டது'' என்றான்.

சூரவர்மனும் பைரவனைத் தன்னோடு அழைத்துச் செல்வதால் தனக்குப் பல நன்மைகள் உண்டு என்றும் அவனால் தனக்கு எந்த அபாயமும் இல்லை என்றும் எண்ணினான். மேலும் அவனது உதவியால் விரைவில் சக்கரவர்த்தியாகவும் ஆகிவிடலாமே.

சூரவர்மன் ராட்சஸனிடம் ''சரி கிளம்பு'' எனவே பைரவன் சாதாரண மனிதன் போலாகி அவனோடு சென்றான். இருவரும் தலைநகரை அடைந்தார்கள். அப்போது பலவீரன் சூரவர்மன் இறந்துவிட்டான் என அறிவித்துத் தானே மன்னன் என மகுடாபிஷேகம் செய்து கொள்ள ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருந்தான். சூரவர்மன் உயிருடன் திரும்பி வந்தது கண்டு அவன் மலைத்துப் போனான்.

சூரவர்மன் கோபமாக ''அடே துரோகி! உன் இந்தக் குற்றத்திற்கு என்ன தண்டனை தெரியுமா?'' என்று கேட்டான். அப்போது பைரவன் குறுக்கிட்டு ''அரசே! இன்று முதல் நீங்கள் ஒருவனைக் குற்றவாளி என்று அறிவித்தால் போதும்.

அவனுக்கு என்ன தண்டனை கொடுக்க வேண்டும் என்பதை நான்தான் தீர்மானிப்பேன். இவன் ராஜத்துரோகி. இவனுக்கு என்ன தண்டனை என்று பாருங்கள்'' என்று கூறி ராட்சஸ உரு எடுத்து பலவீரனைப் பிடித்துத் தன் வாயில் போட்டு விழுங்கி விட்டான்.

அந்த பயங்கரக் காட்சியைக் கண்டு அரசசபையில் இருந்தவர்கள் எல்லாம் நடுநடுங்கினார்கள். பைரவன் பலவீரனை விழுங்கிய பின் சாதாரண மனிதனாக ஆகி விட்டான். சூரவர்மனே அந்த பயங்கரத்தைக் கண்டு வெலவெலத்துப் போனான்.

அன்றிலிருந்து எந்தச் சிறிய குற்றம் செய்பவனையும் மன்னன் குற்றவாளி என்று கூறியதும் பைரவன் அவனைப் பிடித்து விழுங்கலானான். இதனால் மக்கள் பயந்து குற்றமே புரியாமல் இருந்தனர். அப்படி தமக்குள் ஏதாவது தகராறு இருந்தாலும் அவர்கள் அரசன் வரை கொண்டு செல்லாமல் தமக்குள் பஞ்சாயத்து பேசி தீர்த்துக் கொள்ளலாயினர்.

இப்படி மக்கள் தம் வழக்குகளை அரச சபைக்குக் கொண்டு வராமல் போனதால் ராட்சஸனுக்கு உணவு கிடைக்கவில்லை. அவனால் இந்த நிலையை ஏற்க முடியவில்லை. எனவே தனக்கு உணவு கிடைக்க



குற்றம் புரிந்த மக்களைக் கண்டு பிடித்து விழுங்க வேண்டும்என அவன் எண்ணினான்.

இப்படி சில நாட்கள் கழியவே பைரவன் மன்னனிடம் ''மக்கள் குற்றம் புரியாது போனால் எனக்கு ஆகாரமே கிடைக்காது. எனவே பயந்து யாரும் அரச சபைக்கு வழக்குகளைக் கொண்டு வருவது இல்லை. எனவே, நாமே போய் யார் யார் குற்றங்கள் புரிகிறார்கள் என்று கண்டுபிடிக்கலாம். நீ அவர்களைக் குற்றவாளி என அறிவித்ததும் அவர்களை விழுங்கி நான் என் பசியைப் போக்கிக் கொள்கிறேன்'' என்றான்.

சூரவர்மனுக்கு அது சரி என்று



படையில் பனைமர உயர ராட்சஸன் இருப்பது கண்டு எதிரிப் படை பயந்து விட்டது. தன் எல்லையிலிருந்து அந்த மன்னன் சூரவர்மனின் படைகளை அவனது எல்லையில் இருக்கும்போதே பார்த்து விட்டான். அப்போது அவனுக்குச் சட்டென ஒரு யோசனை தோன்றியது. அதனால் அந்த மன்னன் தன் படைகளை பின் வாங்கச் சொல்லிட்டுத் தானும் போய்விட்டான்.

அதைக் கண்டு சூரவர்மன் பலமாகச் சிரித்து ''பயந்து ஓடுகிறான் பார்! நாம் நமது எல்லையைக் கடந்து அவனது நாட்டில் புகுந்து அவனைத் துரத்துவோம்'' என்றான். அச்சமயம் அவனது முந்தைய மந்திர சாந்தசீலர் அங்கு வந்தார்.

அவர் சூரவர்மனைப் பார்த்து ''அரசே! நீங்கள் எல்லை தாண்டிப் போனால் உங்களுக்குத் தோல்வி தான். ஏனெனில் அண்டை நாட்டு மன்னன் உங்களோடு இருக்கும் ராட்சஸன் பைரவன் எனத் தெரிந்து கொண்டு விட்டான். நீங்கள் பைரவனோடு அந்த நாட்டிற்குள் சென்றால் பைரவன் இறந்து விடுவான். ஏனென்றால் அவனுக்கு அந்த நாட்டில் நுழைய அந்நாட்டு மன்னனின் அனுமதி இல்லையே. நீங்கள் உங்கள் படைகளைக் கொண்டு அண்டை நாட்டு மன்னனைத் தோற்கடிக்க

தோன்றவில்லை. அவன் பைரவனிடம் ''உனக்கு உணவுதானே வேண்டும்? இதற்கு நான் இதை விடச் சிறந்த வழி ஒன்றைக் கூறுகிறேன். நாம் அண்டை நாடுகளின் மீது படை எடுத்துச் செல்வோம். போரில் நாம் வெற்றி பெறுவது நிச்சயம். நாம் சிறைப்பிடித்து வைக்கும் எதிரியான வீரர்களை நீ தினமும் ஒருவனாக விழுங்கி உன் பசியைத் தீர்த்துக் கொள்ளலாம்'' என்றான்.

அது சரியான யோசனை என்று ராட்சஸன் ஏற்றான். சூரவர்மன் அண்டை நாட்டின் மீது போர் பிரகடனம் செய்து படைகளைக் கொண்டு சென்றான். அவனது

முடியாது. அந்த மன்னன் தந்திர மாக பைரவனை ஒழித்து உங்களைத் தோற்கடிக்கவே இப்போது பின் வாங்கி இருக்கிறான்'' என்றான்.

அப்போது சூரவர்மனுக்கு தன் நிலை என்ன என்று புரிந்தது. அயல்நாடுகளை வெல்ல பைரவ னின் உதவியைப் பெற முடியாது என்பது அவனுக்குத் தெரிந்து போயிற்று. அவன் யோசிப்பதைக் கண்ட சாந்தசீலர் ''இதற்கு ஒரே வழி பைரவனை நாடுகடத்தி விட்ட தாக அறிவித்து விடுங்கள் அதனால் அவன் தங்களது அனுமதி இல்லா மல் தங்கள் நாட்டில் இருக்கிறான் என்ற நிலை ஏற்பட்டு அவன் இறந்து விடுவான். நாடுகளை வெல்ல நினைக்கும் ஆசையை விட்டுவிடுங்கள் நான் முன்பு கூறியது போல படை எடுப்புகளுக் காக செலவு செய்யப் போகும் பணத்தை மக்களின் நலனுக்காகச் செலவிடுங்கள் அப்போது உயிர்ச் சேதமும் ஏற்படாது. நாடும் முன் னேறும்'' என்றார்.

சூரவர்மனும் பைரவனை அழைத்து ''உன்னை நாடுகடத்தி விட்டேன்'' எனக் கூறவே அவன் பயந்து மறுவிநாடியே மாயமாய் மறைந்தான். அவன் தன் உறைவிட மான பைரவ மலைக்குப் போய் இருந்து விட்டான். அவனால் இனி அந்நாட்டில் அடிஎடுத்து வைக்க முடியாது.

பைரவன் போனதால் மகிழ்ந்த சூரவர்மன் சாந்தசீலரிடம் ''நான் பேராசைப்பட்டுத் தங்களை பதவி யிலிருந்து விலக்கினேன். தாங் களே இனி எனக்கு மந்திரியாக இருந்து வழிகாட்ட வேண்டும்'' என வேண்டினான்.

சாந்தசீலரும் ''சரி. ராட்சஸ பலத்தால் எதையும் சாதிக்க முடி யாது. அன்பினால் அமைதியுடன் சுகமாய் வாழலாம் என்பதை நீ இப் போது புரிந்து கொண்டுவிட்டாயே. அதுபோதும்'' எனக் கூறி மந்திரிப் பதவியை ஏற்றுக் கொண்டார்.



## பிரமிட்டும் பூகம்பமும்

வரலாற்றிலேயே முதன் முதலாக எகிப்தின் பிரமிட்கள் பூகம்பத்தால் பாதிக்கப்பட்டன. பழங்கால கட்டடக் கலைக்கு சான்றாக விளங்குவது பிரமிட்கள். அக்டோபர் 19ந்தேதி கெய்ரோவை உலுக்கிய பூகம்பம். இந்நகரின் அருகேயுள்ள குபூ கியோப்ஸ் பிரமிட்களின் மேல் பாகத்தைச் சேதப்படுத்தி விட்டது. சக்கராவில் மிகப் பழமையான ஆறு அடுக்கு செப்ரஸ் பிரமிட்டின் சில கற்கள் பெயர்ந்து விட்டன. எகிப்தின் பழங்காலப் பெருமையைக் காட்டும் இப்பிரமிட்கள் மேலும் சேதமடையாமலிருக்கத் தக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன.



## மிக அதிக மழை

உலகிலேயே மிக அதிகமாக மழை பெய்யும் இடம் மேகாலயத்திலுள்ள சிராபுஞ்சி என்ற இடம் என்றா கூறுகிறீர்கள்? இல்லை. 1980 வரை சிராபுஞ்சியில் அதிக மழை பெய்து உலகிலேயே முதலிடம் பெற்றது. மழையளவு 11,314 மி. மீட்டர். இதற்குப்பின் ஹவாயியில் உள்ள வெவேல் இதைவிட அதிக மழை பெய்து உலகின்




முதலிடத்தைப் பெற்றது. இங்கு பெய்த மழை அளவு 11,438 மி. மீ இந்த ஆண்டில் சிராபுஞ்சிக்கு 167 கி. மீ. தூரத்திலுள்ள மாசின்ராமில் இந்த இரண்டு இடங்களை விட அதிக மழை பெற்றது. பெய்த மழை அளவு 11,873 மி. மீ. மாசின்ராமில் ஆண்டில் 150 நாட்கள் மழை பெய்து கொண்டே இருக்கும். 1952 ஜூலை 10ந் தேதியில் மட்டும் 989.6 மி. மீ. மழை பெய்தது. இதுவரை நம் நாட்டில் வேறு எங்கும் இவ்வளவு மழை பெய்ததாகப் பதிவேடுகளில் இல்லை.

## கிரகவாசிகளின் குரல் ஒலிகள்

அமெரிக்காவிலுள்ள நாஸா (என். ஏ. எஸ். ஏ) என்ற விண்வெளி ஆராய்ச்சி நிறுவனம் அண்மையில் கலிபோர்னியாவிலுள்ள மௌஜான் பாலைவனத்தில் 34 மீட்டர் அகலமுள்ள 'டிஷ் ஆண்டானா'வைப் பொருத்தியது. இதன் வழியாக தூரத்திலுள்ள கிரகங்களில் வாழ்பவர்களின் குரல் ஒலிகள் கேட்கின்றனவா என்று அல்லும் பகலும் சோதனை செய்து வருகிறார்கள்.





# பயில்வானா?

ஒரு காலத்தில் கர்நாடகப் பகுதியில் சம்பாவதி என்ற நகரை சம்பலன் என்ற மன்னன் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்தான். அவனது தர்பாரில் மாபெரும் வீரர்களும் மல்லர்களும் இருந்தார்கள்.

ஒருமுறை மாமல்லன் என்ற பயில்வான் சம்பலனின் தர்பாருக்கு வந்து "நான் பல நாட்டு மல்லர்களை வென்று தோடாக்களும் பதக்கங்களும் பெற்று பெற்று வந்திருக்கிறேன். உங்கள் நாட்டில் என்னைத் தோற்கடிப்பவன் இருக்கிறானா? அப்படி இல்லை என்றால் தோல்வியை ஒப்புக் கொண்டு எனக்குப் பதக்கமும் பரிசும் அளியுங்கள்" என்றான்.

அவரது மந்திரி மன்னனைப் பார்த்து சைகை செய்துவிட்டு "அரசே! நம் தர்பாரிலுள்ள சண்டப பிரசண்ட அண்ட அதிரடி மல்லர் குண்டப்பாவுக்கு இணையாக இந்த உலகில் யார் இருக்கிறார்? அவர் வெளியூர் போயிருக்கிறார். திரும்ப இரண்டு நாட்களாகும். அதுவரை இந்த மாமல்லர் காத்திருக்க வேண்டும். அவரை இவர் தோற்கடிக்கட்டும் பார்க்கலாம்" என்றார்.

மாமல்லனும் "இரண்டு நாட்கள் தானே. நான் இங்கே தங்கி அவரோடு போட்டிபோட்டு வெற்றி பெற்றுப் பதக்கம் பெறுகிறேன்" என்றான். மன்னனும் அவன் தங்க விடுதி அமைத்து வசதிகள் செய்து கொடுத்தான். மாமல்லனும் அங்கு தங்கினான். ஆனால் மந்திரி குண்டப்பாவின் அடைமொழிகளைக் கூறியதைக் கேட்டதிலிருந்து அவன் மனம் சற்றுக் கலங்கியது.

மறுநாள் மாமல்லன் தங்கி இருந்த விடுதியின் எதிரே ஒரு

—கர்நாடகப் பழங்கதை—

பெரிய மாளிகையில் தடபுடலான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந் தன. அம்மாளிகையின் வாசலை இடித்துப் பெரிதாக்கிக் கொண்டி ருந்தார்கள். அதைக் கண்ட மாமல் லன் பணியாட்களிடம் "இதெல் லாம் எதற்கு?" என்று கேட்டான்.

அவர்களும் "குண்டப்பா வரப் போகிறாரே. அவர் நுழைந்து போக வாசல்களை எல்லாம் பெரி தாக்குகிறார்கள்" என்றார்கள். அப் போது எதிர் மாளிகையில் வேலை களைக் கண்காணிக்கும் மேஸ்திரி "டேய்! நன்றாக திமிசு போடுங் கள். நரை கெட்டியாக இல்லா விட்டால் குண்டப்பா கால் வைக்கும்போது குழியாகிவிடும் அப்புறம் நமக்கு ஒரே வசைகள் தான் கிடைக்கும்" என்று உரக்க கூறிக்கொண்டிருந்தான்.

இதே சமயம் பெரிய பெரிய பாத்திரங்களுக்கு வெண்ணெய், பாதாம் பருப்பு மூட்டைகள் என்று வண்டிகளில் வந்து அங்கு இறங்கு வதை மாமல்லன் கவனித்தான்.

மறுநாள் இருபது குதிரைகள் பூட்டிய மிகப்பெரிய மூடுவண்டி ஒன்று அந்த மாளிகை முன்வந்து நிற்பதை மாமல்லன் கண்டான். அப்போது அங்கு பலர் வந்து "சண்டப்பிரசண்ட அண்ட அதி ரடி வீரர் குண்டப்ப மல்ல மகாப் பிரபுவுக்கு ஜே!" என்று வான் பிளக்க கோஷம் போட்டார்கள். குண்டப்பாவை வரவேற்க மன்ன னும் மந்திரியும் தயாராக அந்த வாசலில் நின்று கொண்டிருப்பதை யும் மாமல்லன் கண்டான்.

அவனுக்கு உதறல் கண்டது. மறுநிமிடமே அவன் யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் தன் விடு தியிலிருந்து கிளம்பிப் போய் விட் டான். இச்செய்தியை ஒரு பணி யாள் மந்திரிடம் தெரிவிக்கவே அவரும் மன்னனிடம் "நம் திட்டம் வெற்றி பெற்றது அரசே! மாமல் லன் ஓடியே போய்விட்டான்" என்றார் சிரித்தவாறே.



## இயற்கை விநோதங்கள்:

## பரஸ்பர ஒத்துழைப்பு



பிராணிகள் தம்மீது மொய்க்கும் ஈக்களையும், கொசுக்களையும் விரட்டத் தம் வால்களைப் பயன்படுத்துகின்றன. ஆனால் வால் எவ்வளவு நீளமாக இருந்தாலும் அதன் உடலின் எல்லாப் பகுதிகளையும் எட்ட முடியாது. அந்நிலையில் ஒரு பிராணி மற்ற பிராணியின் பக்கம் நின்று தன் வாலால் மற்ற பிராணியின் உடல் மீதுள்ள ஈ, கொசுக்களை விரட்டுகிறது.

## தூங்கும் செடிகள்



இரவில் படுத்து உறங்கிக் காலையில் விழித்தெழும் மனிதர்கள் போல சில செடிகள் இரவில் தூங்குகின்றன. இவற்றின் மலர்கள் பகலில் மலர்ந்து இரவு வேளையில் தம் இதழ்களை மூடிக் கொள்கின்றன. இந்தச் செடிகளுக்கு இரவில் வெளிச்சமும் பகலில் இருட்டும் ஏற்படச் செய்தால் இரவில் மலர்கள் மலர்ந்து பகலில் குவிந்து கொள்கின்றனவாம்.

## நீண்ட வாழ்வு



உயிரினங்களில் மனிதனே நீண்டகாலம் வாழ்கிறவன். ஆனால் மனிதனைவிட அதிக காலம் உயிர் வாழும் சில பிராணிகளும் உள்ளன. உதாரணத்திற்கு அன்மோனி ஸ்பாஞ்ச் என்ற கடல் வாழ் இனங்கள் நூறாண்டுகளுக்கு மேலாக உயிர் வாழ்கின்றன. அவற்றின் உடலில் உள்ள உயிரணுக்கள் மீண்டும் தோன்றி அவற்றை அவ்வளவு காலம் உயிர் வாழ வைக்கின்றன.


இதோ உங்கள் மகனுக்கு ஓர் அற்புத பரிசு –
உலகிலேயே சிறந்த துப்பாக்கியின்
அசல் அச்சு

இதோ வந்து விட்டது உலகத்தின் மிகச்சிறந்த துப்பாக்கியின் உற்சாக அனுபவம்.

ட்ரூ-கன்- U.Z.I. இஸ்ரேல் நாட்டின் புகழ்பெற்ற அதிரடிப் படையான மோஸாட் உபயோகிக்கும் துப்பாக்கியின் உண்மையான மாடல்.

தொட்டுப் பாருங்கள். வடிவம், அளவு, வேலைப்பாடு — இவற்றை கவனியுங்கள். சத்தத்தைக் கேளுங்கள். உண்மையிலேயே இது நிஜத்துப்பாக்கி தான் — விசையை அழுத்தும் வரை!

- தண்ணீரை 'சர்' என்று பீச்சியடிக்கிறது.
- 'டுமீல் டுமீல்' என்று இடைவிடாமல் சுடுகிறது.

உடையாத உயர்ரக ப்ளாஸ்டிக்கினால் ஆனது.




- கூரான முனைகளோ, உலோக பாகங்களோ இல்லாதது.
- கறுப்பு, ஆலிவ் பச்சை, பளபளக்கும் வெள்ளி நிறங்களில் கிடைக்கிறது.

புதிய

# Tru-Gun

**U.Z.I. சப்மெஷின் கன்**

*பார்த்தால் துப்பாக்கி, வெடித்தால் வேடிக்கை*



விசேஷ அறிமுக சலுகை

உங்கள் வீட்டிலும் 'டுமீல்' சத்தம் கேட்க வேண்டுமா? இந்த கூப்பனை மறக்காமல் எடுத்துக் கொண்டு விளையாட்டுப் பொருள் அங்காடிக்கு வாருங்கள். ட்ரூ-கன் விலையில் 5% தள்ளுபடி பெறுங்கள்.

பெயர்: ....................................................

வயது: ........................ வகுப்பு: ........................

முகவரி: ....................................................

....................................................

வெற்றி வீரரே! நினைவிருக்கட்டும். இச்சலுகை 31.3.1993 வரை மட்டுமே.

HansaVision CTT 10871 TM

# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1993 மார்ச் மாத இதழில் வெளியிடப்படும்**



M. Natarajan



M. Natarajan

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ ஜனவரி 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 100/- பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026**

---

## நவம்பர் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ: **வீட்டின் செல்வம் கால்நடை**

இரண்டாவது போட்டோ: **நாட்டின் செல்வம் சிறார்படை**

பரிசு பெற்றவர்: **ஏ. எம். கே. மீரான், காயாமொழி**




Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.


---

AMBULIMAMA (Tamil)

January 1993
Regd. No. M. 4863

Crrrunch

And you'll love the fruit in it!

nutrine

**Soft Hearts**

*Juicy, Crunchy, Fruity treats*

FREE!

Send 20 Nutrine Soft Hearts wrappers for a **FREE** Bunny mask to Nutrine Confectionery Co. Ltd., 232, Kilpauk Garden Road Kilpauk, Madras-10.

* Stocks also available without this offer.




THE FINEST, WIDEST RANGE

nutrine

India's largest selling sweets

Visesh/NC/8938